ஓம்.
பரப்ரம்மணே நம:

# பஞ்சதசப் பிரகரணாபாச விளக்கச் சண்டமாருதம்.

புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தி லுள்ள வைதிகர்களால் பிரமாண மென்று கொள்ளப்பட்ட வேதம், வேதாங்கம், நியாயம், மீமாஞ்சை, தரும சாஸ்திரம், புராணம் என்னும் பதினான்கு வித்தைகளுக்கும், இவற்றிற்கு மாறுதலின்றிப் பெரியோர்களால் இயற்றப்பட்டுள்ள நூற்களுக்கும் விரோத மின்றியும், யுக்தி யனுபவ சகிதமாகவும், ஸனகர் முதலிய நால்வர்; ஜனகர், சுகர், நாரதர், வாமதேவர், வியாசர், தூருவாசர், கௌதமர்; வசிட்டர், சடபரதர் முதலிய பிரம நிஷ்டர்களால் கைக்கொள்ளப்பட்டதா யும் உள்ள அத்வைத சித்தாந்தத்தைச் சின்னாண் முன்னர்த் தான் தோன்றித் தம்பிரா ன்களாய்க் கிளம்பிய சில துவித சைவர்கள் நிந்தித்து, சுருதி யுக்தி யனுபவ விரோத மாய் எழுதி வைத்த மாயாவாத நூற்களை மெய்யென நம்பிக் கெடுவாராயினர். இவர் தாம் கெடுவ தன்றி அத்வைத சித்தாந்திகளையும் கெடுக்கும்படி "தான் கெட்டது மன்றிச் சந்திர புட்கரணியையுங் கெடுத்தான்" என்பதுபோல வேத முதலிய கலைகளையும், அவற்றிற் கூறும் பொருள்களையும், உவமானங்களையும் நிந்தனை செய்து வருகின்றார்கள். இவர்கள் இவ்வாறாக வேதவிரோதிகளாய் நின்று நிந்தனை செய்வதை யறிந்த அத்வைத சித்தாந்திகள் அந்தத் துவிதசைவர்கள் செய்யும் நிந்தனைக ளெல்லாவற்றினையும் உடனுக்குடன் சுருதி யுக்தி யனுபவ சம்மதமாய்ச் சத்பிரமாணங்களைக் காட்டி மறுத்தெழுதி வருகிறார்கள். அவ்வாறு மறுத் தெழுதிய வற்றுள் சில புஸ்தகரூபமாயும் நிலவுகின்றன. அவற்றிற் கெல்லாம் விடை யிருக்காது தோல்வித் தானத்தில் நின்றாலும், அறிவுடையோர் வெறுக்குமாறு பன் முறை சாமாதானம் வந்த ஆசங்கைகளையே மீண்டும் மீண்டும் செய்வதில் மாத்திரம் பின்னிடுகின்றார்களில்லை. இவ்விஷயம் பிரம வித்தியா முதலிய பத்திரிகைளையும் துவிதசைவ கண்டன புத்தகங்களையும் வாசிக்கும் அறிவுடை யார் பலருமறிந்ததேயாம். நிற்க;

"குண்டோதர சிவாசாரியா" ரென்பவர், சங்கராசாரிய ருள்ளீட்டாரால் செய்யப் பட்டுள்ள பாஷ்ய இருதயத்தின்மேல் ஆசங்கைகள் செய்து "ஆரியன்" என்பவரால் விடையிறுக்கப் பட்டதின் பேரில் அதற்குப் பதில் பேசு மாற்றலின்றி வாளா போயின ரன்றா? அது தற்காலத்தில் "அத்வைத வுண்மை" யென்னும் பெயரோடு புஸ்தக ரூபமாய் நிலவுகின்றது. அப்புஸ்தகத்தைப் படித்தால் துவித சைவர்கள் அத்வைத சித்தாந்தத்தின் மேற் செய்யும் ஆசங்கைளெல்லாம் வேதவேதாந்த விரோத மென்பது உள்ளங்கை நெல்லிக் கனி போல் விளங்கும்.

இஃதிங்ஙனமாக நிகழும் 1896 ஷ் ஜனவரி மீ 20உ பிரசுரமான நாகை நீலலோசனி பத்திரிகையில் "பஞ்சதசப் பிரகரணாபாச விளக்கம்" என்னும் மகுடத்தின் கீழ் "ஹி.ஹரதத்தன்" என்னும் தாந்திரீக துவித சைவரொருவர், வித்தி யாரண்ணிய சுவாமிகள் செய்தருளிய அத்வைத சித்தாந்தமான ஞான சாஸ்திரங்கள்

பல வற்றுள் ஒன்றான பஞ்சதசப் பிரகரணத்தின் சித்திர தீபிகையில் சில விஷயங்கள் மறுத்தெழுதுவாராயினர். அவ ரெழுதிய மறுப்பு வேத முதலியவை கட்குப் பாகியமா யிருத்தலின் அதை அவ்வேத முதலியவைகளைக்கொண்டே மறுக்க வெழுந்து, "பஞ்சதசப் பிரகரணாபாசவிளக்கச் சண்டமாருத" மென மகுடஞ் சூட்டி வரைகின்றா மென்க. ஹி. ஹரதத்தர் பஞ்சதசப் பிரகரணத்தின் மேற் செய்த ஆசங்கை வேத விரோதமா யிருத்தலோடு அவர் கைக்கொண்டுள்ள துவித சைவத் திற்குங் கேடு சூழ்வதாயும், தம்மதத்திலுள்ள தவறுகளைப் பிறருக்குக் காட்டத் தக்க தாயும் இருக்கின்ற தென்பது மேல்நாமெழுது மறுப்பினாற் றெற்றென விளங்கு மென்க. இனிப் பூர்வபக்ஷியார் கூறியது பூர்வபக்ஷ மெனவும், எமது மறுப்புச் சித்தாந்த மெனவும், முறையே பேர் கொடுத்து மறுத்தல் செய்வாம்.

## பூர்வபட்சம்.

"அந்நூலின் (பஞ்ச தசப் பிரகரணம்) ஆரம்பத்திலேயே அடியில் வருகிறபடி யெழுதப்பட் டிருக்கிறது. அதாவது; 'புடவையினிடத்துச் சித்திரம் ஆரோபிக்கப் பட் டாற்போல, பரமாத்துமாவினிடத்திலே ஜக ஜீவ பரங்கள் ஆரோபம்' என்று உளறி யிருப்பதேயாம், இதிலுள்ள ஆபாசத்தை நண்பர்கட்கு நினைப் பூட்டுவாம். அதாவது; கட்டையிற் கள்ளன் கயிற்றிற் பாம்பு முதலியவைகளைப் போலப் பிரமத்தில் பிரபஞ்சம் ஆரோபம் என்று கூறுவது மாயாவாதிகட்குப் பழம் பாடம்.

## சித்தாந்தம்.

### விவேக சூடாமணி. (மொழி பெயர்ப்பு)

"*சகமிது மெய்யாமாகிற் சத்தியப் பிரமத்திற்குப்*
*புகல்பரி பூரணத்துவம் போயிடும் வேதத்திற்கு*
*மிகவும் அப்பிரமாணத்துவ மேவிடும் பரசிவற்கு*
*மிகலசத்திய வாதித்துவ மெய்திடுமிவை நன்றன்றே*." (269)

என்று ஆதி சங்கராசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளியபடி நீக்க மறப் பரிபூரணமாய் நிறைந்திருக்கும் பரமாத்துமாவி னிடத்தில் ஜடாஜடமாயுள்ள பொருள்கள் எவ்வா றிருக்கு மென்றும், இருக்கின் இரண்டு பொருள்களுள்ள விடத்தில் பூரணத்துவம் இல்லாமையால் இதன்படி பரமாத்துமா'விற்கு அபரிபூரணத்துவ முண்டாகு மென்றும், உண்டாயின் கடபடாதிகள் அவயவங்க ளோடு கூடிக் கண்டமாய்க் கால் தேச வஸ்து சகிதமாய் நாசத்தை யடைவதுபோலப் பரமாத்துமாவும் அநித்தியத்தையும் நாசத்தையும் அடையு மென்றும், அவ்வாறு அடையு மாயின், அது

## மைத்திராயண்ணியுபநிஷத் 6 - வது பிரபாடகம்.

அமூர்த்த மெதுவோ அது சத்தியமானது. இது தான் பிரமம்.

## சர்வசாரோபநிஷத்

ஸஜாதிய விஜாதீய பேத மற்றது பிரமம்.

## வராகோபநிஷத் 2 - வது அத்தியாயம்.

இருக்கிற தென்பது சத்ரூபமான பிரமமே.

## நிராலம்போபநிஷத்

பிரமம் சத்தியம்; சகத் பொய்.

என்கிற சுருதிகளோடு மாறுபடு மென்றும், மாறுபடுதலோடு பிரமம், அபரிபூர ணமாய்ப்போ மென்றும், அதனோடு பிரமமும் ஜடாஜடமான வுலகும் ஒன்றிருந்த விடத்தில் மற்றொன்றில்லாமல் போகு மென்றும், அவ்வாறு கூறச் சுருதிக்கு அபிப்பிராய மின்றென்றும், அது யுக்தி யனுபவத்திற்கு விரோத மென்றும் கருதி, சத்தான புடவை பால் சத்துப் போலியான புடவை அங்கி முதலிய வஸ்திரா பாசமும்; மனிதன், மலை, விருட்சம், முதலிய ஆபாசமுங் கற்பிக்கப்பட்டிருக் கின்றன போல, சத்தான பிரமத்தில் சத்துப்போலியான ஜடாஜடவுலகு கற்பிக்கப் பட்டிருக்கின்றது எனக் கூறற்கு 'புடவையினிடத்துச் சித்திரம் ஆரோபிக்கப் பட்டாற் போல, பரமாத்துமா வினிடத்திலே ஜக ஜீவ பரங்கள் ஆரோபம்' என்று வித்தியார ண்ணிய சுவாமிகள் கூறியுள்ளதை யூகித்துணரு மாற்றலின்றித் திரிபுணர்ச்சி கொண்டு ஹி. ஹரதத்தர் 'உளறியதே யாம்' என்று கூறி யிகழ்ந்தா ரென்க. வித்தியாரண்ணிய சுவாமிகள் தான் சித்திரப்பட வுவமானத்தைக் காட்டினாரோ? ஏனைய அத்வைத சித்தாந்திகள் காட்டவில்லையோ வென்று கருதுமிடத்து, ஏனையோரும் இச் சித்திரப்பட வுவமானத்தைக் காட்டியே இருக்கின்றனர். அது வருமாறு: -

## துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளியற்றிய வேதாந்த சூளாமணி.

சித்திரப்பட மோர்பொருளொடுங் கூடாத் திகழ்வினிற் றவுதமே யெனவும், நெய்த்த கூழ்வருடக் கடிதமேயெனவும் நீனி றத்திலாஞ்சனை யெனவும், பத்தியோ வியஞ் சேர்ந்திரஞ்சிதமெனவும் படுதல்போல்பிரமமுமாயை, வைத்தகாரியங்கள் கடந்துறு நிலையில் வயங்கு சித்தெனும் பெயர் புனைந்தே. (43)

ஓர்வடிவாகிக் குளிர் முதன்மாற்று முண்மையாம் சித்திரப்படம் போன்று, ஆர்வமதொருங்கே அகற்றிடற்தியைந்து அணிபெற நிற்பதோர் பிரமம், ஏர்பெற வரைந்த சித்திரம் என்ன இருக்கும் அப்பரத்தில் இவ்வுலகந் தேர்வுறில் தன்னைத் திரிபற எங்கும் திகழும் இந்நிலையது பின்னும். (46)

## பட்டினத்துப் பிள்ளையார் திருக்கழுமல மும்மணிக்கோவை.

*எந்தைநின்*
*திருவளர் நாட்டங் கருணையிற் பெறலும்*
*யாவையு மெனக்குப் பொய்யெனத் தோன்றி*
*மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை*
*ஓவியப்புலவன் சாயல் பெற வெழுதிய*
*சிற்பவிகற்கமெல்லா மொன்றிற்*
*றவிராது தடவினர் தமக்குச்*
*சுவராய்த் தோன்றுந் துணிவுபோன் றனவே.*

இவ்வத்வைத சித்தாந்திகள் சித்திரப்பட உவமானத்தைத் தான்றோன்றித் தம்பிரான்களாய்க் கூறியிருக்கின்றார்களா? சுருதி சம்மதப்படிக் கூறியிருக்கின்றார் களா? என் றாராய்வுழி,

### சுக்கிலயசுர் வேதம்

**பைங்களோபநிஷத் 1 -வது அத்தியாயம்.**

"அவனிடத்தி லடங்கியிருந்த சகலசகத்தையும் பிராணிகளுடைய கரும வசத்தினாலே, சுருட்டி யிருக்கிற சித்திர மெழுதிய துணியை விரித்தாற் போலத் தோற்றச் செய்தான். பிராணிகளுடைய கருமக்ஷயத்தினால் மறுபடி மறைத்துப் போடுகிறான். அவ னிடத்திலேயே சகலமான பிரபஞ்சமும், சித்திர மெழுதிய துணியைச் சுருட்டியதுபோ லடங்கி யிருக்கின்றன."

### சாமவேதத்தில் மைத்திராயண்ணியுபநிஷத்

**4 - வது பிரபாடகம்.**

"இந்திரஜாலம்போல் மாயாசுவரூபமாயும் சொப்பனம்போல் பொய்த் தோற்ற மாயும் கதளீகருப்பம் போல் சாரமற்றதாயும் வேஷக்காரனைப்போலப் பலபல வேஷமெடுக்கிறதாயும் சுவரி லெழுதிய சித்திரம் போல் பொய்யான மனோக்கிய மாயுமிருக்கிறது.

என்று சுருதி கூறுகின்றபடியால், சுருதிப் பிரமாணப்படியே சித்திரப்பட திருட்டாந்தம் வித்தியாரண்ணிய சுவாமிகளும் பிறரும் கூறினாரென்பது பசுமரத்தா ணியாமென்க. இங்ஙனமாக 'இதிலுள்ள ஆபாசத்தை நண்பர்கட்கு நினைப்பூட்டுவாம்' என்று அரதத்தர் கூறியது தமது விசாரணையின்மையை யாவர்க்கும் அறிவித்த படியா மென்க.

## சுக்கில யசுர் வேதம் பைங்களோபநிஷத் 1 - வது அத்தியாயம்.

"அதினிடத்தில் மருபூமியில் (பாலைநிலத்தில்) ஜலம், கிளிஞ்சலில் வெள்ளி, கட்டையில் புருஷன், ஸ்படிகத்தில் வர்ணம் முதலியவைபோல், சிவப்பு வெளுப்பு கறுப்பு இந்தக்குணமயமானதும் ஏற்றக்குறைவன்றி ஒவ்வொன்றும் சமமாயிருக்கிற குண சுவரூபமயமானதும் வாக்குக் கெட்டாதது மாகிய (என்றால் மித்தையானது மாகிய) மூலப்பிரகிருதி யிருந்தது"

என்றும்,

## சுக்கிலயசுர்வேதம் நீராலம்போபநிஷத்.

"இரண்டாவதற்றதாயும் எங்கும் தொடர்ச்சி யுள்ள தாயும் சகல சுவரூபமாயு மிருக்கிற பிரமத்தினிடத்திலே தேவ மிருக நர ஸ்தாவர ஸ்திரீ புருஷ வருணாசிரம பந்த மோக்ஷ உபாதி (கற்பிதமான வேஷம் அல்லது கற்பிதமான தடை) யாக விருக்கிற பல தேக பேதங்களினாலே கயிற்றிற் பாம்பென்கிற பிரமைபோல் கற்பிதமாயிருக்கிற ஞானமே யஞ்ஞானம்"

என்றும்,

## ருக்வேதம் ஆத்மபோதோபநிஷத்.

"பழுதையில் பாம்பு முதலியனபோல் (பழுதையில் பாம்பு என்கிற பிரமைக் குக்காரணம் பழுதைபோல) பிரபஞ்சத்திற் காதார ரூபமாய்ப் பிரம்ம சத்து மாத்திரமே சூழ்ந்துகொண்டிருக்கிறது. ஆகையால் ஜகத்தில்லை. என்றும் கயிற்றிற் பாம்பு முக்காலத்திலு மெப்படி யில்லையோ அப்படி அகங்காராதி தேகம்வரையி லுள்ள ஜகத்தானது அத்துவயனாயிருக்கிற என்னிடத்தில்லை"

என்றும்,

## யஜுர் வேதம் வராகோபநிஷத்
### மூன்றாவது அத்தியாயம்.

"கிளிஞ்சலில் வெள்ளி எப்படி (அக்கியானத்தினால்) கற்பிக்கப்படுகிறதோ, அப்படிப் போல என்னிடத்திலேயே மாயாமயமான மகதாதி ஜகத்தானது மாயையி னாலே கற்பிக்கப்படுகிறது"

**என்றும்,**

## காசிகாண்டம்.

"கானலிடைத்தெண்ணீரும்கயிற்றினில் வாளரவும் அலைகடலிற்பட்ட, கூன்முது கிப்பியிற்றோன்றும் வெள்ளியு மம்முதலுண்மை குறிக்கிற்றீரு, மானவை போ னினையறியிற் றோன்று சகமனைத்து நில்லாதழியுமாற்றாற் றேன விழ்பூங் கடுக்கை யணிசெல்வ நின தறை கழற்றாள் சென்னிசேர்ப்பாம்."

என்றும் உள்ள பிரமாணங்களால் ‘கட்டையிற் கள்ளன், கயிற்றிற் பாம்பு முதலியவைகளைப் போலப் பிரமத்தில் பிரபஞ்சம் ஆரோபம் என்று கூறுவது மாயாவா திகட்குப் பழம்பாடம்' என்று ஹி.ஹரதத்தர் பழிகூறியது குற்றப்பட்டுப் போயதென்க. ‘மாயாவாதிகட்குப் பழம்பாடம்' என்று கூறியது மிகு ஆச்சரியமா யிருக்கிறது! சத்பிரமாணமான வேத முதலிய கலைகளிற் கூறிய வுவமானங்களை யெடுத்து யுக்தி யனுபவத்திற்கு விரோதமின்றிப் பேசுபவராயும் "மாயையானவள் அநாதி முடிவை யுடையவள்....இருக்கிறவளுமல்ல, இல்லாதவளுமல்ல... எவள் வாஸ்தவத்தி லில்லையோ அவள் தான் மாயை. அவள் சொரூபம் அஞ்ஞானம். அதேதான் மூலப்பிரகிருதி” யென்று யசுர் வேதத்தில் சர்வ சாரோபநிஷத் கூறியபடி மாயைக்கு இலக்கணங் கூறுபவராயு முள்ள அத்வைத சித்தாந்திகள் மாயாவாதிக ளாகின்றபோது வேதத்தையும், அவற்றிற் கூறும் உவமானங்களையும், அவற்றிற்கு விரோதமின்றிப் பேசும் அத்வைத சித்தாந்தத்தையும் நிந்தனை செய்யும் ஹி. ஹரதத்தரும் அவரினத்தவரும் என்ன வாதிகளாவார்களோ, அதை நடுவுநிலை யுள்ள புத்திமான்களே யுணரக் கடவர். மேலும், இத்துவித சைவர்களே பந்தத்திலும் விடுதியிலும் மாயையை விடாதிருக்கிறார்களென்று எது, மேற்கோள், எடுத்துக் காட்டுடன் “துவிதசைவரே மாயாவாதிகள்” என்று மகுடங்கொடுத்து "இந்து" என்பவர் எழுதியிருக்கும் புஸ்தகத்திற்கு மாறுத்தரங் கொடுக்கும் வலி யின்றி, "வற்றிய வோலை கல கலக்கும்" என்றபடி வெற்றெனத் தொடுத்தலாக, ஹி. ஹரதத்தர் அத்வைதிகளை மாயாவாதிக ளெனப் புகறல் அல்லோல கல்லோலம் போன்ற பொரு ளற்ற வொலியா மென்க; பழம் பாடம் என்று கூறியதையும் இதற் கினமாகக் கொள்க. சுருதியிற் கூறும் உவமானத்தைச் சொல்பவர் பழம் பாடஞ் சொல்பவு ரானால் அதை நிந்தித்து அதற்கு விரோதமாகப் பேசுபவர் என்ன பாடஞ் சொல்பவர்? பழம்பாட மென்று சொல்வது மற்றொரு விதத்தில் அத்வைதிகட்குச் சிறப்பேயாம். ஏனெனின் அவர்கள் பழமையான வேத நெறிப்படிச் சொல்பவ ராகலி னென்க. நேற்று முந்தாநாள் தோன்றிய புது நூலின்படி சொல்பவரன்றென்பது அதன் கருத்து.

## பூர்வபட்சம்.

"கட்டையிற் கள்ளன் தோன்றுவது அக்கட்டையின் இயல்பன்று கட்டை தன்னைத் தானே கள்வனாகக் காண்பதுமின்றே. அக் கட்டையைக் காண்பவனது கண்ணின் குற்றத்தால் அது கள்வனாகத் தோன்றுகிறது என்று கடாவுங்கால் ஆகாயத்தைப் பார்த்து விழித்து...... ஓடிப்போவது........ வழக்கம்.

## சித்தாந்தம்.

இம்மாதிரியான கேள்விகளை இவர் போன்ற சில துவைதிகள் கேட்டு, அத்வைதிகளால் விடை யிறுக்கப்பட்டு வாய்ப் பூட்டிட்டுக்கொண்டார்கள். அங்ஙனமாக மீண்டும் அவ்வாறான கேள்விகளையே சிறிதும் நாணின்றி மிகு வீரத்தோடு கேட்பது என்னோ? 'கட்டையிற் கள்ளன்' என்னும் உவமானம் ஒரு பொருளினிடத்து மற்றொரு பொருள் தோன்றும் என்பது வரைக்குமே யன்றி மற்றப்படி யன்று. இக்கருத்தினை நன்கு தேர்ந்தறியாது 'கட்டைவிற் கள்ளன் தோன்றுவது கட்டையின் இயல்பன்று' என்பது என்னை? கட்.டையிற் கள்ளன் தோன்றுவது இயல்பன்றாகில் அக்கட்டையானது மாடாகவும், மலையாகவும், பாம்பாகவும், பாயாகவும், பேழையாகவும், பொதியாகவும் ஏன் தோன்றுகிற தில்லை? அவ்வாறு தோன்றாமையின் அக்கட்டையானது கள்ளனாகத் தோன்றுந் தர்ம்மத்தை யியல்பாகவே பெற்றிருக்கின்ற தென்பது வெளிப்படையென்க. கட்டையிற் கள்ளன் தோன்றுவது அரதத்தரது கொள்கையின் படி இயல்பு, அதாவது இயற்கையாகாமற் போகவே, செயற்கையென்றாயிற்று. செயற்கையாயின், எதனது செயற்கையினாற் கட்டையிற் கள்ளன் தோன்றுகின்றான்? அவ்வா றின்றென்பது யாவருக்கும் அனுபவ மாயிற்றே. செயற்கை யாகாமையி னன்றா கட்டையிற் கள்ளன் அதாவது மனித வுருஅன்றி வேறுஉருத்தோன்றாம லிருக்கின்றது? 'கட்டை தன்னைத் தானே கள்வனாகக் காண்பதுமின்றே' என்றியம்பியது சந்திரனிடத்திற் களங்கம் தோன்றுகிறதென்றால், சந்திரன் தன்னைத் தானே களங்கமாகக் காண்பது மின்றே என்பாருக்கும்; இராமன் இலட்சுமணனைப்போல் தோன்றுகின்றா னென் றால், இராமன் தன்னைத் தானே இலட்சுமணனாகக் காண்பதுமின்றே என்பாருக்கும் ஹி. ஹரதத்தர் தோல்வி யுற்றவ ரன்றென்பதுவிளங்கியதென்க. 'அக்கட்டையைக் காண்பவனது கண்ணின் குற்றத்தால் அது கள்ளனாகத் தோன்றுகிறது' என்றது பின்னும் வியப்பாயிருக்கிறது! கட்டையானது காண்பவனது கண்ணின் குற்றத்தால் கள்ளனாகத் தோன்றுமாயின், அக்கட்டையானது காண்பவனது கண்ணின் குற்றத்தால் வீடு ஆகவும் மாடாகவும் கல்லாகவும் ஏன் தோன்றுகிற தில்லை? தோன்றாமையின் அது கண்ணின் குற்ற மன்றென்றறிக.

"பண்புந் தொழிலும் பயனு மென்றிவற்றின், ஒன்றும் பலவும் பொருளோடு பொருள் புணர்ந்து, ஒப்புமை தோன்றச் செப்புவதுவமை."'

என்னும் உவமைச் சூத்திரத்தின் பொருளைக் கற்றோரிடம் நன்கு கேட்டிருப் பாராயின், கட்டையிற் கள்ளன் என்பது கண்ணின் குற்றமா மென்னும் வழக்கி லிறங்கா ரென்க. கல்லாமையாற்றான் வீண்வழக்கி லிறங்கிக் கற்றோர் வெறுக்கு மாறு குழப்புகின்றா ரென்றறிக. இவ்விஷயம் விரிவாய் "அத்வைத தூஷண நிக்கிரக" த்திற் காண்க.

## பூர்வபட்சம்.

"பஞ்சதசப் பிரகரணக் குழறுபடையோ யதிலும் பெரிதா யிருக்கின்றது. அதாவது; இங்கே 'புடவை' யென்பது பருத்தியாகிய காரணப் பொருளி னின்று மனிதரார் செய்யப்படுகிற (ஒருவனால் அல்லது பலரால்) ஒரு காரியப் பொருள். அப்படியே, 'சித்திரம்' என்பது கறுப்பு சிவப்பு முதலிய சாயங்களைக் கொண்டு ஒருவனால் செய்யப்படுகின்ற காரியம். புடவை யெப்படிச் செய்பவனாகிய வினை முதலையின்றித் தானே காரியப்படாதோ அப்படியே சித்திரமும் எழுதுவோன் ஒருவனை யின்றித் தானே காரியப்படா. இவை யிரண்டும் இரண்டு தனித் தனி சடப் பொருள்கள். இந்த வுபமானம் மேலுப மேயத்திற் பொருத்துவ தெப்படி? முதலாவது சித்தாயுள்ள பிரமத்திற்கு ஜடமா யுள்ள புடவையை யுபமான மாக்கின தே யாபாசம். இது யானையைக் காணாத வொருவனுக்குப் பூனையை யுவமானங் காட்டுவது போலுமாம்.

## சித்தாந்தம்.

பஞ்சதசப் பிரகரணத்திலுள்ள விஷயங்கள் சுருதி விரோத மன்றென்பது மேற்காட்டியள்ள பிரமாணங்களாற் பெறப்பட்டமையின், அது குழறு படையாவது யாங்ஙனோ? சுருதிக்கு மாறின்றிப் பேசும் பஞ்சதசப் பிரகரணத்தைப் 'பஞ்சதசப் பிரகரணக் குழறுபடையோ அதிலும் பெரிதா யிருக்கின்றது' என ஹி. ஹரதத்தர் கூறியது வேத பாகியத் தன்மையே யாம். "அவ் வானிலங்கு பிறை யன்ன விளங்கு வாலெயிற்று." என்றும், "செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை." என்றும், "மயிற்றோகை போலுங் கூந்தல்". என்றும், "புலிபோலப் பாய்ந்தான்" என்றும் வரும் இச் சொற்றொடரில், எயிறாகிய (எயிறு - பல்) உவமேயத்திற்கு வானில் விளங்கும் பிறைச்சந்திரனும், கையாகிய உவமேயத்திற்கு செல்லும் (செல்=மேகம்), கூந்தலா கிய உவமேயத்திற்கு மயிற்றோகையும், பாய்ந்தான் என்னும் உவமேயத்திற்குப் புலியும் உவமானங்களாக விருக்கின்றமையின் அது பொருந்தாது. ஏன் பொருந்தா தெனின், பல்லானது வாயின்கண் இருக்கின்றது, பிறைச் சந்திரனோ ஆகாயத்தி லிருக்கிறான். பல்லுக்குத் தேய்தல் வளர்தல் இன்று, பிறைச் சந்திரனுக்கோ முன்பு வளர்தலும் பின்பு தேய்தலு முண்டு. பல்லோ மிகச் சிறிதா யிருக்கிறது, பிறைச் சந்திரனோ பூமியி னளவில் 50-ல் ஒரு பாகங் கொண்ட அளவுள்ள பருமனா யிருக்கிறான். பல்லுக்கோ அசையுந் தன்மை யில்லை, பிறைச் சந்திரனோ அசையுந் தன்மை யுள்ளவனா யிருக்கிறான் என்றும்; கையானது உடலோடு பொருந்தி யிருக்கிறது, மேகமோ அவ்வாறில்லை; கையி னிடத்தில் விரல்களுண்டு, மேகத்தி னிடத்திலோ அஃதில்லை; கையினிடத்திலோ வெண்மை கருமை யின்று, மேகத்தி னிடத்திலோ அஃதுண்டு என்றும்; கூந்தலானது சிரசைப்பற்றி யிருக்கின்றது, மயிற் றோகையோ அவ்வா றில்லை; கூந்தலி னிடத்துக் கண்களின்று, மயிற்றோ கையி னிடத்தோ அஃதுண்டு என்றும்; இவ்விடத்திற் பாய்ந்தவன் மனிதன், புலியோ மிருகம்; மனிதனுக்கு வாலில்லை, புலிக்கோ வால் இருக்கிறது என்றும் பேசும் விவேகிக்கும் சித்திரப்பட வுவமானத்தைப் பற்றி மேலே பேசியுள்ள ஹி.ஹரதத்தரு க்கும் சிறிதும் வேறுபாடிராதென் றறிக. பண்பியும், பண்பும், தொழிலும் பயனு

மெனக் கூறப்பவென நான்கு. அவற்றுள் பண்பியென்பது காட்சிப் பொருளுங் கருத்துப் பொருளுமாகிய இயங்கு திணையும் நிலைத்திணையுமாம். பண்பென்பது அவற்றின் குணமாய்த் தோன்றித் தமக்கு வேறு குணமின்றி நிகழ்வது; தொழிலெ ன்பது அவற்றின்புடை பெயர்ச்சியாய்க் காலம் புணர்ந்து நிற்பது; பயனென்பது அது காரணமாகப் புலப்படுங் காரியம். பண்பியாகிய ஒரு பொருளுக்கு ஒரு பொருளு வமையாங்கால் இரண்டற்கும் பொதுவாகிய தோர் குண வேதுவாகலானும், தொழிலேது வாகலானும், பயனேது வர்கலானும் ஒப்பித் துரைக்க ப்படும் என்று தண்டியலங்காரம் பொருளணியியலிலுள்ள உரையை யறியாமலும் "வெளிப்படை யுவமம் வினைபயன் மெய்யுரு, வெளிப்பட நின்று விளக்குவ தாகும்" என்னுஞ் சூத்திரப்படி இச் சித்திரப்பட வுவமை மெய் உவமத்திற் சேர்ந்த தென் றறிந்திடுக. "பவளம் போலுஞ் செய்ய வாய்" என்னும் அத்தொடர் சொல் முழுவதூஉம் உவமையா மென்ப தாயிற்று. ஆயினும் பவளமும் வாயும் ஒத்த பண்பினவேனும் ஏற்ற இழிபுகளால் வாயிற் பவளஞ் சிறந்தமையானும் "உயர்ந்த தன்மேற்றே யுள்ளுங்காலை" என்பவாகலானும், பவளம் உவமையெனவும் வாய் பொருளெனவும் செம்மை அவ்விரண்டனையும் புணர்த்துதற்கு ஏதுவாகிய பண்பெனவும் போலுமென்பது அவ்வணியைப் புலப்படுத்துவ தோர் உருபெனவும் வேறு வேறு கூறுபடுத் தணர்க என்று இலக்கண விளக்கத்தார் அணி யியலிற் கூறியதை யறியா மலும் போவது என்னோ?

சித்திரப்பட உவமையைத் உவமையைத் தொல்லாசிரியர் நெறிக்கு மாறுபட்டுப் பேசும் அரதத்தர் கலியுகாதி 4998-ல் இருத்தலன்றித் தொல்லாசிரியர் களான தொல்காப்பியர் முதலிய இலக்கனிகள் உண்டாவதற்கு முன்னரே இருந்திரு ப்பாராயின், உவம வியல் ஒன்று வெகு நேர்த்தியாய்ச் செய்திருப்பார். அது தப்பிப் போனதற்காக வருந்துத லன்றி வேறென் செய்வது! அதை நிறைவேற்றுவதற் காசத்தான் சித்திரப்பட வுவமையை மறுக்கின்றார் போலும். ஹி. ஹரதத்தர் சித்திரப்பட வுவமையை மறுப்பதைக் காட்டிலும் தொல்காப்பிய வுவமை யியலை மறுத்து ஓர் நூல் செய்வாராயின், அது சால்பாகும்.

புடவையையும் அதிற் றோற்றிக்கொண்டிருக்கும் சித்திரத்தையும் பிரமத்திற் கும் அதிற்றோற்றிக்கொண்டிருக்கும் சராசரப் பிரபஞ்சத்திற்கும் உவமை கூறியதை மறுக்கும்படி, புடவை பருத்தியாகிய காரணப் பொருளினின்று மனிதரால் செய்யப் படுகின்ற காரியப் பொருளென்றும், சித்திரம் கறுப்பு சிவப்பு முதலிய சாயங்களைக் கொண்டு ஒருவனால் செய்யப்படுகின்ற காரியம் என்று மெழுதியவர்: தமது மதத்தில் படத்தைக் காரியப்படுத்தத் தந்து வாயன் எப்படி நிமித்தகாரணனா யிருக்கிறானோ, அப்படியே உலகத்தைக் காரியப்படுத்தச் சிவன் நிமித்தகாரணனாய் இருக்கிறானென்று கூறுவதைக் கவனியாது போயது என்னோ! சிற்றறிவுஞ் சிறிதொழிலும் சின்னாள் வாழ் கையையு முடைய தந்துவாயனை முற்றறிவும் முழுதொழிலும் நித்தியமுமாயுள்ள சிவனுக்கு உவமை சொல்வது நியாயமாமோ? மேலும் தந்துவாயன் மாயாசம் பந்தம் பெற்ற தேகேந்திரிய அந்தக்கரணங்களுடன் கூடி யிருவினைக்குத் தக்க சுக துக்கங்களை யனுபவிக்கிறான்; சிவனும் அவ்வாறே தேகேந்திரிய அந்தக் காரணங்களுடன் கூடி யிரு வினைக்குத் தக்க சுக துக்கங்ககளை யனுபவிக்கின்றானா? தந்துவாயன் பாஞ்ச பூதத்தின் காரியமா

யிருக்கிறான். சிவனும் பாஞ்ச பூதத்தின் காரியமா யிருக்கினானோ? தந்துவாயன் தனக்கு மாதா பிதாக்களை யுடைத்தா யிருக்கிறானோ? தந்துவாயன் கண்டப் பொருளா யிருக்கிறான். சிவனும் கண்டப்பொருளா யிருக்கிறானோ? வியாபகமான சிவனுக்குக் கண்டமான தந்துவாயனை யுவமை சொல்வது பொருந்துமோ? 'புடவை யெப்படிச் செய்பவனாகிய வினை முதலியின்றிக் காரியப்படாதோ, அப்படியே சித்திரமும் எழுதவோன் ஒருவனையின்றிக் காரியப்படா' என்றவர் தந்துவாயன் ஒருவனால் படைக்கப்பட்டது போல் சிவனும் ஒருவனால் படைக்கப்பட்டிருக்க வேண்டுமே என்றதைக் கவனியாதது என்னை? 'இவை யிரண்டும் தனித் தனி சடப் பொருள்கள். இந்த வுவமானம் மேலுவமேயத்திற் பொருந்துவ தெப்படி? முதலாவது சித்தாயுள்ள பிரமத்துக்குச் சடமாயுள்ள புடவையை யுவமான மாக்கியதே ஆபாசம்' என்றவர்: "மெய்ஞ் ஞானந் தன்னில் விளைவன்றே தசத்தாத, லஞ்ஞானமுள்ள மணைதல்காண் - மெய்ஞ்ஞானந், தானே யுளவன்றே தண் கடனீ ருப்புப் போற், றானே யுளமுளவாத் தான்" என்னும் சிவஞான போதம் ஏழாஞ் சூத்திர உதாரண வெண்பாவின்படி, தமது மதம் பதி வியாபகம் என்றும், பசு வியாத்தி என்றும், பாசம் வியாப்பியம் என்றும், அவற்றிற்கு உவமையாகக் கடல் வியாபகம் என்றும், நீர் வியாத்தி யென்றும், உப்பு வியாப்பிய மென்றும் கூறி, கடல் ஸ்தானத்தில் பதியையும், நீர் ஸ்தானத்தில் பசுவையும், உப்பு ஸ்தானத்தில் பாசத்தையும் வைத்துப் பேசி யிருப்பதை யறியாது போயது என்னை? சடான பாசத்திற்குச் சடமான வுப்பை உவமை சொல்வது ஒத்துப் போயினும் சித்தான பதிக்கும் பசுவுக்கும் சடமான கடலையும் நீரையும் உவமை சொல்வது ஆபாச மாகாதோ? இதுவுமன்றிச் செயப்படு பொருள்களான கடலும் நீரும் உப்பும் செயப்படு பொருள்க ளாகாத பதிக்கும், பசுவுக்கும், பாசத்திற்கும் மேலே யிவர் புடவை விஷயத்திற் பேசியபடி யெப்படி உவமை யாகும்? மேலும் சித்துப் பொருளுக்குச் சடப் பொருளை யுவமை சொல்லக் கூடா தென்பற்கு வேத பாகியமானதாயும் தமது மதத்திற் சித்துப் பொருளுக்குச் சடப் பொருளை மேல் யாம் காட்டியபடி யுவமை கூறுவதை யறியாததாயு முள்ள சங்கற்ப நிராகரண மெனனும் நூலும், அதற்குச் சார்பான நூலுந் தவிர வேறு நூல்களில் பிரமாண முண்டேல் காட்டுவா ராக. 'இது யானையைக் காணாத வொருவனுக்குப் பூனையை யுவமானங் காட்டுவது போலாம்' என்ற அரதத்தருக்குத் தம்மத சத்தாந்தங் தெரியாது போயின தென்? "உவமான மெல்லா மேகதேசம், ஏற்றற் கியைவதைப் பற்றி யென்க" என்பதையும்; வினை, பயன், மெய், உரு என்னும் நால்வகை யுவமங்களையும், அது ஒவ்வொரு தன்மை யைப் பற்றிச் சொல்லும் என்பதையும் அறியாதும், அறிவு நூலைக் கற்றற்குச் சாதனமாயுள்ள கருவி நூல்களான இலக்கண தருக்கங்களைப் பயிலாதும் "மூர்க்கனு முதலையுங் கொண்டதுவிடா" என்றபடி தம் மனம்போனவாறு முன்பின் முரண்பட வெழுதுபவர்கட்குப் பதிலெழுதுதல் அநாவசியக மாயினும் வேதக் கருத்துக்கு விரோத மின்றிய பஞ்சதசப் பிரகரணத்தையும், அதிற் கூறிய உவமையையும் நிந்தித்தலின் அது காரணமாகப் பதில் கூறினாமன்றி மற்றப்படி யன்றென்க. அத்துடனே அவர் கூறிய அந்திந்தனைகள் அவரது வேத பாகிய சைவத்திற் கூறும் உவமைகளும் பெறு மென்று காட்டினா மென்க. வேதக் கருத்துக்கு மாறில்லாத சித்திரப்பட வுவமையை நிந்தித்தலால் அரதத்தர் வேத விரோதியான அவைதிகர் அல்லது பாஷாண்டி யென்பது திண்ணமாமென்க.

இப்படிப்பட்ட அரதத்தரைப் போன்றவரைத் தான், சாமவேதம் மைத்திரா யண்ணி யுபநிஷத் 7-வது பிரபாடகத்தில் "வீணான தருக்கம், திருஷ்டாந்தம், மோசம், இந்திரஜாலம் இவைகளினாலே வைதிக மார்க்கத்தில் பற்றுள்ளவர்களை எதிர்க்கி ன்றவர்கள் இப்படிப்பட்டவர்களில் ஒருவனுடனும் சகவாசஞ் செய்யக்கூடாது. அவர்கள் வெளிப்படையான திருடர்கள் ..... சுருதி சொல்லுகிறதாவது 'பொய்யான திருஷ்டாந்தங்களையும் ஏதுக்களையுமுடைய கபடமான நிராத்தும வாதங்க ளினாலே மோகத்தை யடைந்த ஜனங்கள், வேதத்திற்கும் (சூதடியான) வித்தைக்கு முள்ள பேதத்தை அறிகிற தில்லை" என்று கூறியது போலும்.

## பூர்வபட்சம்.

"அங்ஙனந் தோன்றுவது அந்தப் பரமாத்துமாவுக்குச் சுபாவமாம் என விடுப்பின் வினை முதல் வேண்டாத அதன் செய்திக்கு வினை முதலை யின்றி யமையாத சித்திரப் படத்தை யுவமானமாக வெடுத்தாள்வது மூடத்தன மன்றோ?"

## சித்தாந்தம்.

இதற்கு விடை மேலெழுதி யுள்ளவற்றில் பெறப்பட்டமை காண்க. மேலும் வினை முதலை வேண்டாத பதிக்கும், பசுவுக்கும், பாசத்திற்கும் வினை முதலை யின்றி யமையாத அதாவது ஈசுவரனால் படைக்கப்பட்ட) முறையே கடலையும் நீரையும் உப்பையும் உவமையாகவும் இதுவேயுமன்றிப் பதிக்குக் காந்தத்தையும், குயவனையும்; பசுவுக்கு நெல்லையும், செம்பையும்; பாசத்திற்கு உமியையும், களிம்பையும் உவமையாகத் தமது மதம் சொல்வதை அரதத்தர் கவனியாதது என்னை?

## பூர்வபட்சம்.

"இதுவேயுமன்றி அஃது அப்பர மான்மாவிற்கு இயல்பாமாயின், அவற்று ளொன் றான ஜீவன், முத்தியடைய விரும்புவ தெற்றிற்கு? முத்தி யடையினும் மீண்டும் தன்னியல்பின்படி ஜகஜீவ பரந் தோன்றுந் தானே."

## சித்தாந்தம்.

இவரது மதப்பிரகாரம் பதியாகிய கடலினிடத்தில் பசுவாகிய நீர் இருப்பது எஞ் ஞான்றுமன்றோ? அங்ஙனமாகப் பசுவானது சரியை கிரியை முதலிய சாதனங்களை யனுஷ்டித்து முத்தி யடைய விரும்புவது எற்றிற்கு? பசுவானது முத்தியடையினும் மீண்டும் தன்னியல்பின்படி (கடலினிடத்து நீர் நீராக விருத்தலன்றி வேறுவிதமாக விராமைபோல) பச பசுவாகத்தோன்றுமன்றி வேறாகத் தோன்றுதே. தோன்றாதாக வே, பசு முத்தியடைந்ததென்றுரைப்பது அசம்பவமா மென்க. அரதத்தர், தாம் கைக் கொண்டிருக்கும் துவித சைவத்திலுள்ள ஆக்ஷேபம்போல் அத்வைத சித்தாந்தத்திலு மிருக்குமென் றெண்ணிப் பஞ்சதப்பிரகரணத்தைச் சங்கிக்கின்றார் போலும்.

பஞ்சதசப் பிரகரணத்தின் சித்திர தீபிகையை முற்று மொருகால் வாசித்திருப்பா ராயின், இவ்வாறு சங்கிக்கமாட்டார். அவ்வாறின்மையாற்றான் குழப்புகின்றாரென்க. ஷை பிரகரணம் சித்திர தீபிகையில் "தான் விழித்தா லொழியத் தன்னுடைய சொப்பனம் போகாததுபோல அத்துவித பிரமஞானத்தினாலே அஞ்ஞானகற்பிதமான சீவேசுவர சகத்தென்கிற சொப்பனம் போக வேண்டும்" என்றிருப்பதைக் கவனித்தாரின்று. கவனித்தாராயின் இவ்வாறு எழுதார்! எழுதார்! இவ்வாக்கியத்தால் அத்தீபிகையின் கருத்துச் சடாசடமாயுள்ள இவ்வுலகு சொப்பனம் போன்றதெனப் பெறப்பட்டது. இக்கருத்துக்கிசைய சூதசங்கிதை முத்திநிலை அத்தியாயத்தில் "திரிசியமாம்பவஞ்சம் சொப்பனம் போற் றோன்ற" என்றும், பாகவதத்தில் "உரைத்திடு கனவுபோல வுபாதி பொய்யாகும்" என்றும், ரிபுகீதை 24-வது அத்தியா யத்தில் "கனவினிடைக் கற்பிதமா முலகேபோலும்" என்றும், பட்டினத்தடிகள் பாடலில் "கனவே போன்று நனவுபெயர்பெற்ற மாயவாழ்க்கை" என்றும், தாயுமான வர் பாடலில் "இந்திரஜாலங் கனவு கானனீரென வுலக மெமக்குத் தோன்ற" என்றும் கூறியுள்ளவற்றையு மறிக.

பரமான்மாவினிடத்திலே தோற்றமாயுள்ள சீவன் துக்கரூபமான பந்தத்தினி ன்று நீங்கிச் சுகரூபமாய் நிற்றற்கென்றும், வறுத்த வித்து முளையாவாறுபோன்று துக்க ரூபமான பந்தத்தினின்றும் நீங்கின் சீவன் மீண்டும் தோன்றானென்றும், சுகவடிவாயே நிற்பானென்றும் வேதாந்த சாஸ்திரங்கள் கூறுதலை யறியாதும், பிரமகீதை முண்டகோபநிடதத்தில் "இந்த வுடம் புறை சீவபரங்களெனப்படு மன்னமிரண், டந்த விரண்டிலு மொன்று வினை ப்பயனங்கு நுகர்ந்திடுமாம், தொந்தமறும் பரமொன்றுமுணாது சொலப்படு பேதமில்வான், வந்தகடத்தி லகப்படுபேதமெனப்படு மாயையினால்" திருமந்திரத்தில் "தன்னையறியாதுடலை முன்றானென்றான், தன்னைமுன் கண்டான்றுரியன் றனைக்கண்டான், துன்னு துரிய முமீசனோடொன்றாக்கால், பின்னையும் வந்து பிறந்திடுந்தானே." என்கிற செய்யுட் களின் பொருளை யுணராதும் 'முத்தியடையினும் மீண்டும் தன்னியல்பின்படி சக சீவ பரந் தோன்றுந் தானே' என்றது விசாரணையின்மையேயாம். அத்தீபிகை பரமான்மாவாகிய புடவையில் சகசீவபரம் சத்துப்போலியாய் அதாவது தோற்றல் மாத்திரமாகச் சித்திரம் போ லிருக்கின்றன வென்று வினா விடை ரூபமாக நன்கு விளக்குவதைக் கிரகிக்குமாற்ற லில்லாமையினால் திரிபுணர்ச்சிகொண்டு இவ்வாறு பேசினாரென்க.

## பூர்வபக்ஷம்.

"இனிப் பரமான்மாவாகிய புடவை யிடத்துச் சக சீவபரங்களாகிய சித்திரத்தை யாரோபமாகக் கண்டவன்றான் யாவன்?"

## சித்தாந்தம்.

புடவையினிடத்துச் சித்திரந் தோன்றுவது போலப் பரமான்மாவினிடத்துச், சகசீவபரங் தோன்றுகின்றன வென்றால் அதைக் 'கண்டவன்றான் யாவன்' என்கிறார்.

இப்படிப் பேசும் இவர் நாஸ்தீக ராகாது போவாரோ! ஏன் நாஸ்தீகராகாது போகா ரெனின் குடத்தைக் குயவன் படைப்பதுபோலக் கடவுள் உலகத்தைப் படைக்கின்றா ரென்றால் குடத்தைப் படைக்கும் குயவனைக் கண்டாற்போல வுலகத்தைப் படைக்கும் கடவுளைக் கண்டவன் யாவன்? ஒருவனு மின்று; ஆகவே, கடவுள் இன்று என் றுரைப்பதற்கு; அஞ்சாரென்பது 'கண்டவன்றான் யாவன்?' என்ற தொடரால் பெறப்படுகின்ற தென்க. சொப்பன வுலகத்திலுள்ள பிற மனிதர்கள், அச் சொப்பன வுலகத்திற்கு விவர்த்த அபின்ன நிமித்தோபாதான காரணமா யுள்ள யுள்ள பிரமத்தை அதாவது பரமான்மாவை அறியமுடியாது. முடியாதாகவே “கண்டவன்றான் யாவன்?' என்ற தொடர் தவறுத லடைந்து போயதென்க. இக்கருத்துப்பற்றியன்றோ பிரமகீதை கேனோபநிடதத்தில் “வாக்குமனமுங் கண்ணு மற்றுள இந்தியங்களுமே நோக்கரிய பரஞ்சுடரை” என்றும், சூதசங்கிதை மோசகனையுரைத்த அத்தியாயத்தில் "ஆதியாயனாதியாயாதியந்த மில்லாதாயள வைக்கெட்டா நீதியாய்” என்றும், திருவிளையாடற்புராணம் மண்சுமந்தபடலத்தில் “மறைகளாலளவை தன்னால் தேவரால் மனத்தால் வாக்கால் அறிவருஞ்சோதி” என்றுங் கூறின? பரமான்மாவாகிய புடவையினிடத்துச் சகசீவபரங்களான சித்திரத்தில் ஒன்றான சீவன், தனக்குக் காரணமான பரமரத்துமாவென்னும் புடவையைக் காணமுடியாதென்பது அரதத்தர் எழுதிய வாக்கியமே தெளிவாகக் காட்ட, அதனை யுணராது அரதத்தர் 'கண்டவன்றான் யாவன்?' என்று பேசுவது என்னேயோ! பிரமத்தில் சக சீவ பரம் அத்தியாசமாய்ப் புடவையில் சித்திரம் இருப்பது போன் றிருக்கின்றன வென்பதற்கு வேதப்பிரமாணமும் யுக்தியனுபவமும் காட்டியிருப்பதோடு அத்தியாசத்திலொன்றான சீவன், தனக்குக் காரணமான யதார் த்த பிரமத்தை அறிதல் கூடாதென்றும் மேலே காட்டியிருக்கின்ற மையான் 'கண்டவன்றான் யாவன்?' என்பது அடாமொழியாயிற்றென்க. அற்றன்று; அப்பரமான் மாவாகிய புடவையினிடத்துச் சகசீவபரங்களைக் காண ஒருவன் அத்தியாவசிய கமாய் வேண்டுந்தா னென்று அரதத்தர் வலியுறுத்துவாராயின், அவர் அவ்வாறு வலியுறுத்தல் அவரது துவித சைவத்திற்கே தீங்கு பயக்குமென்பது கீழ் வருமாற்றா லறிக. பதியாகிய கடல் வியாபகத்தில் பசுக்களாகிய நீர் வியாத்தியாயும், பாசமாகிய வுப்பு வியாப்பியமாயும் இருத்தலையும், சித்தியாரில் “ஆரியன்குலாலனாய் நின் றாக்குவ னகில மெல்லாம்" என் றிருத்தலையும், "இலதென்றலி னான்மா உளது" “எனதுடலென்றலி னான் மாவுளது" “ஐம்புலனறிதலினான்மாவுளது" "ஒடுக்க மறிதலினான் மா வுளது" " கண்படி லுண்டி விலையின்மையி னன்மா வுளது" "உணர்த்த வுணர்தலி னான் மா வளது" என்று சிவஞான போதம் 3-ம் சூத்திரத்தில் முதலதிகரண முதல் ஆறாமதிகரணம் வரைக்கும் முறையே கூறியுள்ள ஆன்மா வையும் கண்டவன் யாவன்? காண்பவ னொருவ னுளனெனின், வீட்டை யறிகிறவன் அவ்வீட்டிற்குப் புறம்பா யிருத்தல் போன்று பதி பசு பாசங்களை யறிகிறவன் அப்பதி பசு பாசங்களுக்குப் புறத்திலன்றோ விருக்கவேண்டும்? அவன் யாவன்? அவன் பதி வியாபகத்திலடங்காததற்கு ஏது என்னை? அவன் பதி பசு பாசங்களாகாத தனி முதல் போலும், மேலும் அத்தனி முதலா லறியப்பட்ட பதி பசு பாசங்கள் “உணருரு வேனைய பதியும் பசுவும் சடமாயும் போவதோடு அப்பதி பசு பாச மூன் ருரு அசத்து" என்னுஞ் சிவ ஞான போத சூத்திரப்படி அசத்தாயும் பாசம் நீங்க வேனைய பதியும் பசுவும் சடமாயும் போவதோடு அப்பதி பசு பாச மூன்றுங் கண்டமாயும் அநித்தமாயும் போய் அழிவுப்பாட்டையும் பெறுமென்பது காண்பான் ஒருவன்

வேண்டு மென்பதால் பெறப்படுகினறது. காண்பான் ஒருவன் வேண்டுவ தின்றெனி லோ இத்தோஷ மின்று.

## பூர்வபட்சம்.

"இவ்வாறே அந்நூலிலுள்ள ஒவ்வொரு பகுதிகளும் குழறுபடையாகவே இருக்கின்றன.

## சித்தாந்தம்.

பஞ்சதசப் பிரகரணமானது வித்தியாஸ்தானமாயுள்ள வேத முதலிய கலைக ளுக்கும் யுக்தி யனுபவத்திற்கும் விரோத மின்றென்று மேலெழுதி யுள்ளன வற்றால் பெறப் பட்டமையின், அது ஒருபோதும் குழறுபடை யாகாது. பின்னை இவர் எழுதும் விஷயமும் அவ்விஷயத்திற்குச் சார்பாயுள்ள சங்கற்ப நிராகரண முதலிய நூல்களுமே குழறுபடையா மென்க. சங்கற்ப நிராகரண முதலிய நூல்கள் வேத வேதாந்தங்களுக்கு மாறுபட்டிருக்கின்றன வென்று சமயம் நேர்ந்துழி யெடுத்துச் காண்பிப்போம். சூதசங்கிதை யொன்றைப் படித்துப் பிறகு ஷை சங்கற்ப நிராகரண முதலிய நூல்களைப் படித்தால் அவற்றிலுள்ள தவறுகள் தெற்றென விளங்கும்.

## பூர்வபட்சம்.

"சித்திரப்படந் தானே தானாக விருந்தால் வெளுத்தபட மென்றும் கரியால் அச்சுக் கட்டினால் லாஞ்சனபட மென்றும் கண்டாற்போல பரமாத்துமாவுக்கு நாலுவித அவஸ்தையேது? அதற்கு உபாதி யேது? இங்ஙனம் சங்கை யெழுப்பிய அந்நூலுடையார். இதற்குச் சரியான விடை கூறத் தம் போலி வேதாந்த மதத்தி லிட மில்லாமையால் 'பரமாத்துமா ஒருபாதியு மற்றுத் தாமா யிருக்கும் போது சித்தென் றும் மாயையோடே கூடினா லந்தர்யாமி யென்றும் சமஷ்டிக்குப் பூத சூக்கும் சரீரத்துடனே கூடினால் இரண்ணிய கர்ப்பனென்றும் சமஷ்டி ஸ்தூலபூத ஸ்தூல சரீரத்துடனே கூடினால் விராட் புருஷனென்றுஞ் சொல்லப்படும்' என்று கூறியதேயாம். இதுதானோ சமாதானம்?

## சித்தாந்தம்.

சித்திரப்படம் அதாவது புடவை தனித்திருக்கும்போது வெளுத்தபடமென்று பெயரைப் பெறுவது போலப் பிரமம் தனித்துள்ளபோது சித்தென்றும், கரியால் அச்சுக் கட்டினபோது அப்புடவை லாஞ்சன பட மென்றும் பெயர் பெறுவதுபோல, சத்துக்கும் அசத்துக்கும் விலட்சணமாயுள்ள மாயா சம்பந்தம் அத்தியாசமா யுற்றபோது அப்பிரமம் அந்தர்யாமி இரண்ணிய கருப்பன் விராட் புருஷன் என்னும் நாமங்களை யடைகிற தென்றும் மேல் ஹரதத்தர் எழுதிக்காட்டிய பஞ்சத சப்பிரகரண வாக்கியத் தினால் வெளியாகின்றன. இவ்வாறு அப்பிரகரணம் கூறுவது வைதிக நூற்களுக்கு விரோதமின்றென்பதும், அநீர்வசனீய மாயாசம்பந்த அத்தியாசத்தினால் பிரமம் கடா

காய மகாகாயம்போல உபாதிபேதத்தினால் நாமரூப ஆரோபங்களைப் பெறுகின்ற தென்பதும் கீழ்வரும் பிரமாணங்களா லறிக.

சாமவேதம் மைத்திராயண்ணியுபநிஷத் 6-வது பிரபாடகத்தில் "(சிருஷ்டிக்கு) முந்தி பிரமமே ஜகத்தாக இருந்தது" என்றும், "ஆகாசத்தைப்போலொன்றிலு மொட்டாதவர்" என்றும், ஷை 7-வது பிரபாடகம் "ஒருபாத.பிரம்மமானது மூன்று அவஸ்தைகளிலுஞ் சஞ்சரிக்கின்றது, மூன்று பாத பிரம்மமானது துரியாவஸ்தை யில் சஞ்சரிக்கிறது, சத்தியம் அசத்தியம் இவைகளுடைய வியவகாரத்தின் பொருட்டு இந்தத் துவைத பாவமானது பரமாத்துமாவுக்குக் காணப்படுகிறது" என்றும், யசுர் வேதம் சர்வ சாரோபநிஷத்தில் "மேற்கண்ட மூன்று அவஸ்தை களுடைய பாவாபாவங்களுக்கு. (இருப்பு இல்லாமைக்கு) சாக்ஷியாயும் பாவா பாவங்கள் (சுபாவமாய்) தனக்கில்லாமலுமிருக்கிற நிரந்தர (இடைவிடாத அல்லது அகண்ட) சைதன்னிய மாத்திரமாக விருக்கும் நிலைமை யெதுவோ, அது துரியம்; (துரியாவஸ்தை யென்று சொல்லப்படுகின்றது) அச்சைதன்னிய மெது வென்றால், மூன்று அவஸ்தைகளுடன் சம்பந்தப்பட்டதாயும் மூன்றவஸ்தைகளினால் ஊகிக்கத் தக்கதாயும் மூன்று அவஸ்தைகளற்றதாயும் சுத்தமாயுமிருக்கிற தெதுவோ அது தான்" என்றும், சூதசங்கிதை பஞ்சப்பிரம விசாரத்தில் "பரசிவன் மாயையினால் ஐம்பிரம வுருவானான்" என்றும், ஷை பரசிவ சொருபத்தில் "மறை முதல் தனக்கு நாய ரூபங்கள் மருவுதலில்லையே யெனினும், கறையற விளங்கும் மாயை யினாலே கற்பிக்கப்பட்டன வாகும்" என்றும், வாயுசங்கிதை சிவம் சத்தியுரு விபூதி யுரைத்த அத்தியாயத்தில் "மாயையி னின்று முக்குண்ப்பகுதி வந்திடும் வந்த மற்றதனில், ஏய்வுறக் குணங்கள் மூன்றும் வந்திடுமால் அவற்றினில் இறைவர் மூவர்களோ, டாயிருபத்து மூன்று தத்துவமு மெய்திடும் அவற்றினால் அலகில், தூயபேரண்ட முடம்புகள் வந்து தொடர்ந்துறத் தோன் றிடு மன்றே" என்றும், சுக்கிலயசுர்வேதம் பைங்களோபநிஷத் 1-வது அத்தியாயத்தில் "அவனிடத்திலேயே சகலமான பிரபஞ்சமும் சித்திரமெழுதிய துணியைச் சுருட்டியதுபோ லடங்கியிருக் கின்றன" என்றும், "ஈசனுக்குச் சுவாதீனமாயிருக்கிற ஆவரண சக்தியினிடத்திலிரு ந்து ரஜோகுணப்பிரதானமான மகத்தென்கிற பெயரையுடைய விக்ஷேப சக்தி தோற்றிற்று, அதில் பிரதிபலித்த தெதுவோ அது இரண்யகருப்ப சைதன்னிய மாயிருக்கின்றது. மகதத்தவ அபிமானியான அவன் (இரண்டகருப்பன்) வெளிப் படையானதும் வெளிப்படை யாகாததுமான தேகமுடையவனாகின்றான், இரண்யகருப்பனிடத்தி லிருக்கிற விக்ஷேப சக்தியினிடத்திலிருந்து தமப் பிரதான மான அகங்காரமென்கிற ஸ்தூல சக்தியுண்டாயிற்று. அதில் பிரதிபலித்த தெதுவோ, அது விராட் சைதன்னியமாகின்றது" என்றும் உள்ள வாக்யங்களை 'இதுதானோ சமாதானம்' என்ற வினாவிற்கு விடையாய் வைத்துக் கொள்வாராக.

## பூர்வபக்ஷம்.

"நிருபாதிகராய் நின்மல சித்தா யுள்ள பரமாத்மா அங்ஙன முபாதி யுறுதற்குக் காரண மென்ன?"

## சித்தாந்தம்.

ஆகாசம் நீலநிறமாயும், சட்டி கூடாரமாயும், பிறவாயும் அத்தியாசத்தினால் தோன்றுவது போல நிருபாதிகமாய் நின்மலசித்தாயுள்ள பரமாத்துமா, அத்தியாசத்தினால் சித் சடம் போல் தோன்றுகின்றது. ஆகாச மானது நீலாதி பேதமாக வுபாதியுற்றிருப்பினும் உண்மையி லெவ்வா றின்றோ, அவ்வாறே பரமாத்துமாவும் சதசத் விலட்சண அநீர்வ சநீய மான மாயையினால் சித் சட பேதமாக உபாதி யுற்றதுபோ லிருக்கின்றது. இவ்வாகாய வுவமத்தினால் பரமாத்துமா உபாதி யுறுவதற்குக் காரணமும், அவ்வுபாதி கற்பனை யென்றும், கற்பனை யாயிட பிரமம் எஞ்ஞான்றும் நிருபாதிகமாய் நின்மல சித்தாய் விளங்குகிற தென்றும், ஆகாசத்தைத் தவிர நீலாதிகளுக்கு எப்படிப் பொருளின்றோ, அப்படியே பரமாத்துமாவைத் தவிரச் சித் சட பேதங்களுக்குப் பொருளின்றோ, அப்படியே பரமாத்துமாவைத் தவிரச் சித் சட பேதங்களுக்குப் பொருளின்றென்றும் ஆகாயம் எப்படி விகாரமற்றதோ, அப்படியே பரமாத்துமாவும் விகாரமற்றதென்றும் பெறப்படுகின்றன. இதனுண்மை புலப்படாது, இக்கலியுக அரதத்தர் வேதவிரோதமான கேள்வி கேட்டது போலச் சின்னாள் முன்னர்க் குண்டோதர சிவாசாரி யென்னு மொருவரும் பாஷிய இருதயமென்னும் வேதாந்த நூலின் மேல் சங்கை செய்து, "அத்வைதவுண்மை" என்னும் நூலில் விடைபெற்று, வாய்ப் பூட்டிட்டுக்கொண்டார். இத்தகைய வேதவிரோதிகள்: வைதிகர்கள் போல் நடிப்பது, கலியின் மகத்துவமேயன்றி வேறு யாதுரைப்போம்! ஆகாசத்தில் நீலாதிகள் தோன்றுவது போன்று, பரமாத்துமாவினிடத்தில் சித்சடபேதங்கள் தோன்று மென்பதற்குப் பிரமாணங்கள் வருமாறு: -

## யோகசிகோபநிஷத்.

ஆகாயத்தில் நீலத்தன்மையும், பாலை நிலத்தில் சலத் தோற்றமும், கட்டை யில் புருஷன் என்கிற பிராந்தியும் போல, சித்தரத்மா விடத்தில் பிரபஞ்சம் தோன்றுகின்றது.

## சிவரகசியம் 31 - வது அத்தியாயம்.

ஈனமுறாக்ககனத்தில் நீலரூபமிறவாம லிருந்திடுமேற் சகத்துஞ் சத்தாம். (5)

## உருத்திர இருதயோபநிஷத்.

ஆகாசத்திலே கடாகாசம் மகாகாசம் என எப்படிப் பேதங் கற்பிக்கப்பட்டிருக் கின்றதோ, அப்படியே பரப்ரம்மத்தி னிடத்தில் சீவேசுவரர்கள் கற்பிக்கப்பட் டிருக்கிறார்கள்.

## வராகோபநிஷத் 2 - ம் அத்தியாயம்.

மகாகாசத்தில் கடாகாசம் மடாகாசம்போலச் சிதாகாசமாயிருக்கிறவென் (ப்ரம்மம்) னிடத்தில் சீவேசுவரர்கள் கற்பிக்கப்பட் டிருக்கிறார்கள். ஆத்துமாவின் சிருட்டிக்கு முந்தி எதானது இல்லையோ, அப்படியே முடிவிலும் எதானது தள்ளப்பட்டதோ, அது மாயையென்று விவேகத்தினாலே பிரமஞானிகளால் சொல்லப்படுகிறது. மாயையும் அதின் காரியமும் நசித்துப்போனால் ஈசுவரத்துவமு மில்லை; சீவத்துவமு மில்லை. ஆகையினாலே நிருபாதிகமான ஆகாசம் போல் நான் சுத்தனாகவும் சித்தாகவு மிருக்கிறேன்.

## மைத்திராயண்ணியுபநிஷத் 6 - வது பிரபாடகம்.

ஆகாசத்தைப்போல் ஒன்றிலு மொட்டாதவர். (17)

இருதயத்தி லிருக்கிற ஆகாச மாகிய இந்தப் பிரமமானது எல்லா இருப்புக்கும் பொக்கிஷமா யிருக்கிறது. (27)

நின்மல சித்தாயுள்ள பரமாத்துமா வுபாதி யுறுதற்குக் காரணத்தைக் கடாவிய அரதத்தர்: சிவஞான சுவாமிகள் சிவஞான போதம் 4-வது சூத்திரம் "மாயா தனு விளக்கா" என்னும் உதாரண வெண்பாவி னுரையில், "வியாபக வயிர் அணுத் தன்மைப் படுமாறு செய்தலின், ஆணவமல மென்னும் பெயர்த்தாய்" என்று எழுதி யிருப்பதை மாத்திரங் கவனியாமற் போயதென்? இது மாத்திரம் நியாயமாமோ? வியாபகமான வுயிரை ஆணவ மலமான பாசமானது அணுத் தன்மைப் படுமாறு செய்யும் போது அந்த வியாபகமான வுயிர் வியாபகத்தன்மை கெட்டன்றோ அணுவாகவேண்டும்? வியாபகத் தன்மை கெடாமலே அணுவாயிற் றெனின், வியாபகங் கெடாமல் அணுவாத லெங்ஙனம்? வியாபகமும் அணுவும் எதிர் மறைக் குணங்களா யுள்ளன. வியாபக மானது தனக் கெதிர் மறையா யுள்ள அணு வாகுமேல், (பெரிய பொருள் சிறிய பொருளாகும் போது பெரிய வென்னுந் தன்மை கெட்டுச் சிறிய வென்னுந் தன்மை யடைவது போன்று) வியாபகங் கெட்டன்றோ அணுவாதல் வேண்டும்? வியாபக வுயிர் அணுவாத லென்பது பந்தத்தில். முத்தியிலோ அணுவாத லொழிந்து வியாபக மாகின்ற தெனக் கூறுகின்றனர். அங்ஙன மாயின் அணுத் தன்மை கெட் டன்றோ வியாபகமாதல் வேண்டும்? முன்னும் பின்னும் வியாபகமா யுள்ள ஆத்துமா இடையில் மாத்திரம் பாசத்தால் அணுத்தன்மை யடைத லெவ்வாறு? முன்னும் பின்னும் வியாபகமாயுள்ள ஆத்துமா இடையில் பாசத்தால் அணுத்தன்மைப் பட்டதென்பது ஓர் கால வரையறையின்மே னிற்க, அதற்கு விரோதமாகச் சிவஞான சித்தியார் 4-வது சூத்திரம் "அசித்தரு வியாபகம்போல்" என்னும் விருத்தத்தில் "ஞானச்செய்தி யனாதியே மறைத்து நிற்கும் பசுத்துவமுடைய னாகிப் பசு வென நிற்கு மான்மா" என்று ஆத்துமாவுக்கு அநாதி பசுத்துவம் அதாவது அணுத்தன்மை கூறல் நியாயமாமோ?

## பகவத்கீதை 2 - வது அத்தியாயம்.

ஊறுபட வொன்றினுளே பிறத்தல் பிறந்துளவாதல், வேறுபட வளர்தல் வளர்ந்து அயலொன்றாய் விளைந்தமைதல், மாறுபடத் தேய்தல் அறமாய்தல் என வருகின்ற, ஆறியல்பும் உடம்பன்றி அறிவடையா வாதலினால். (23)

என்று சட்பாவ விகாரம் உடம்புக் கன்றி ஆத்துமாவுக்கு இன்றெனக் கூறவும், அவ்வாறு கூறல் வைதிகமத சம்மதமும், யுக்தி யனுபவப் பொருத்தமும், யாவர்க்கும் காட்சி யளவையுமா யிருக்கவும் இவற்றிற் கெல்லா மாறகச் சித்தான ஆத்துமாவுக்குச் சட சம்பந்தமான சட்பாவ விகாரத்தில் வியாபகமான வுயிர் அணுவாயிற் றென்று தேய்தல் விகாரத்தையும், விடுதியில் அவ்வணு வியாபகமாகு மென்று வளர்தல் விகாரத்தையும் சொல்லுதல் நியாயமாமோ?' வியாபக வுயிர் அணுத்தன்மைப் படுமாறு செய்தலின்' என்றமையின், செய்யாமையும் பெறப் படுகின்றது. செய்தலும் செய்யாமையும் எதிர்மறைத் தொழில்கள், செய்யாமை யுள்ளபோது செய்தலும், செய்தலுள்ள போது செய்யாமையும் இரா. ஒன்றி லொன் றின்மையான வித் தொழில்களை ஆத்துமா ஏற்கின்றது. பாசம் வியாபகமான வுயிரை அணுத்தன்மை செய்தபோது செய்யாமை யின்று; அணுத் தன்மை செய்யாத போது செய்த லின்று. செய்தலும் செய்யாமையுமான விரண் டெதிர்மறைத் தொழில்கள் ஒரு காலத்தி லிரா. ஒரு காலத்தி லிரா வாகவே, செய்தல் ஒரு காலத்தையும் செய்யாமை மற்றொரு காலத்தையு மேற்கின்றன. உயிரானது வியாபகமா யுள்ளபோது செய்யாமையையும் அணுவாகும்போது செய்தலையும் பெற்று, வியாபகமா யுள்ள போதொரு காலத்தையும் அணு வாகும் போ தொரு காலத்தை மேற்று ஓரளவுக்குள் நிற்றலின், இவர் மதங் கூறுமாறு ஆத்துமாவுக்குப் பாசம் அனாதியா யுள்ளதென்பது சிறிதும் பொருந்தாது. பாசமானது வியாபக வுயிரை யணுத்தன்மை செய்த போது அவ்வியாபகமான அணுத்தன்மை யடைந்தது ஆரம்பமாகவா? பரிணாமமாகவா? விவர்த்தமாகவா? என்னும் இக்கேள்விக்கு ஆரம்பமாக வென்னின், ஆரம்ப மென்பது நூலின் கண் ஆடை வருதல், மண்ணின் கண் குடம் வருதல் போன்ற காரண காரிய வாத மாகும். இதில் நூலும் மண்ணும் காரணமும், ஆடையும் குடமும் காரியமுமா யிருப்பது போன்று, வியாபகங் காரணமும், அணு காரியமுமாகும். எது காரியமோ, அது "காரணமதனாலன்றிக் காரியமுளவாய்த் தோன்றா காரணமொழிய வேறுகாரிய மின்மையாலே" (19) என்னும் பிரமகீதை சாந்தோக்கிய வுபநிடத வாக்கியத்தின்படியும் யுக்தி யனுபவத் தின் படியும் அசத்தாய்ப் போகின்றமையின், காரியமான அணு உயிர் சத்தாகாது; பின் என்னாகு மெனின் அசத்தே யாகு மென்க. பரிணாமமாக வென்னின், பரிணாம மென்பது பால் தயிராதல் போலாம். இதில் பால் கெட்டுத் தயிராதல் போன்று, வியாபகம் கெட்டு அணுவாய்ப் போம். இனி விவர்த்தமாக வென்னின், விவர்த்த மென்பது கயிற்றின்கன் பாம்பும் கானலின் கண் நீரும் தோன்றுதல் போலாம். இதில் கயிற்றின்கண் பாம்பும், கானலின்கண் நீரும் அத்தியாசமாய்த் தோன்றுவது போன்று, வியாபகத்தின் கண் அணு அத்தியாசமாய்த் தோன்ற வேண்டும். இவ்வத்தியாசம் அதிர்வசநிய மாதலின், விவர்த்த வாதத்தின்படி அணுப் பொய்யாகும். வியாபகம்

அணுவாதல் ஆரம்பம், பரிணாமம், விவர்த்த மென்னு முக்கூற்றுள் அடங்காதெனின், பின் எக்கூற்றுள் அடங்கும்?

பாசமானது வியாபக வுயிரை யணுத்தன்மை செய்தற்கு நிமித்த மென்னை? சடமான ஆகாசத்தையே யணு வாக்குந் திற னற்ற சடமான பாசம் சித்தான ஆத்துமாவை யணுத் தன்மை செய்த தென்பது அந்தகாரம் செஞ் ஞாயிற்றைக் கரு ஞாயிறாகச் செய்து விட்ட தென்பாரது கூற்றுக் கொப்பா மென்க. வியாபகமா யுள்ள வுயிரைக் கட்டச் சட மான பாசத்திற்கோ வலியின்று; உயிரோ, தனது சுகத்தை யிழந்து போகு மாறு பாசத்தாற் கட்டுண்டு துக்கத்தை யடையாது; அடையு மென்றாலோ, அவ்வா றடைதற் கேதுவான இருவினை ஆன்மாவின் கண் முன்னர் இன்று. இவ்விரண்டையும் முதல்வன் ஒன்று படக் கூட்டி வைத்தா னெனில், அம் முதல்வன், கிஞ்சித்துந் தோஷ மின்றி முத்தி நிலையில் விளங்குதற் குரிய வியாபகத் தன்மையோடிருந்த உயிரைப் பாசத்தாற் கட்டுப்படுத்தி, துக்கப்படச் செய்தல் சிறிதும் நியாய மாகாது; நியாய மாகாததோடு இதுகாறும் முத்திபெற்ற ஆன்மா இன்றென்று சொல்லவேண்டியது. வியாபகமாயும் சுக ரூபமாயு மிருந்த ஆத்துமாவைக் காரணமின்றிப் பாசத்தாற் கட்டிச் சனன மரணங்களிலுழலப்பண்ணி, பலவகையாகத் துக்க மனுபவிக்கும்படி செய்த முதல்வன் அநேக கோடி சன்மங் களிற் செய்த சற் கிருத்தியங்களினால் மனத் தூய்மை யுண்டாய் அதனால் தேகான்ம விவேகம் வந்து சற் குருவை யடைந்து மெய்ஞ் ஞான உப தேசம் பெற்று முத்தி யடைந்த ஆத்துமாவை மீண்டும் பாசத்தாற் கட்டான் என்பதற்கு நியாய மென்னை? இது காறும் வாசித்து வந்த விஷயத்தில் ஆத்துமா தனது சுகத்தை இழந்து கஷ்டத்தை வடையப் பாசத்தைப் பற்றுவதற்கும், பாசம் ஆத்துமாவை வியாபகத்தி னின்று நீக்கி யணு வாகச் செய்வதற்கும்; முதல்வன் ஆத்துமாவையும், பாசத்தையும் ஒருங்கு சேர்ப்பதற்கும் எதுவும் பயனும் இன் றென்பது திண்ணமா மென்க. முதல்வன் பாசத்தால் ஆத்துமாவைக் கட்டினான் என்ற போது கட்டினமை யும் கட்டாமையும் பெறப்படுகின்றன. கட்டினானென்பது ஒருகாலத்தைப் பெறுதலின் அதற்குமுன் ஏன் கட்ட வில்லை யென்ற கேள்வி யுண்டாம். அதற்கு முன் கட்டுவதற்கு இஷ்ட மின்றெனின், கட்ட வேண்டுமென்று இஷ்டம் வந்ததற்குக் காரணம் வேண்டும். அக் காரணம் யாது? முதல்வன் உயிரைப் பாசத்தாற் கட்டினது தன்னுடைய சுகத்திற்கா? உயிரினது சுகத்திற்கா? தன்னுடைய சுகத்திற்கெனின் கட்டுவதற்கு முன் முதல்வன் சுகமின்றித் துக்கமா யிருந்தாரென்றாகின்றது. உயிரினது சுகத்திற் கெனின் உயிரானது பாசத்தாற் கட்டுப்பட்ட பிறகு இக்கட்டாகிய துன்பத்தினின்று நீங்கப் பிரயத்தனமு மந்தப் பிரயத்தனத்திற்கு வரும் முட்டால் இடுக்கணும் அடைகின்றமையின், அதற்குஞ் சுக மாகாது. முதல்வன் எஞ்ஞான்றும் சுகரூபமாயிருந்தும் ஓர் காருண்ணியங் கொண்டு ஆன்மாவைப் பாசத்தாற் கட்டினா னென்னின், காருண்ணியங் கொள்வதற்குப் பல்லாற்றானும் ஏது வில்லாமையின், அம்முதல்வன் செய்கை தனக்கும் பிறர்க்கும் இதமாகாத பயனில் செய்கையாய் முடிகின்ற தென்க. சிவஞானசித்தியார்: முதல்வன் அருவம் 4, உருவாருவம் 1, உருவம் 4 என ஒன்பது பிரகாரமாயிருப்பானென்று கூறுகின்றதே; இது பொருத்த முடையதாகுமோ? உருவம் அருவம் உரு வாருவம் என மூன்றுந் தம்முள் மாறு பட்ட குணங்களன்றோ? தம்முள் மாறுபட்ட குணங்களை முதல்வன் அத்தியாசமாக வனறியுண்மையாகப் பெற்றிருப்பதாய்ச் சொல்வது இயற்கைப் பிரமாணத்திற்கு

விரோதமன்றோ? விரோதமன்றெனின் ஓர் உவமானத்தில் அமைத்துக் காட்டுவா ராக. இவ்வாறு குளறுபடையாகத் தமது மதசித்தாந்தமான வேதபாகிய மாயாவாத துவிததாந்திரிகசைவங் கூறுவதை யறியும் விரகின்றி; களங்கமற்றதாயும், வேதப் பிரமாணத்திற்குச் சிறிது மீறாததாயு முள்ள அத்வைத சித்தாந்தமான 'பஞ்சதசப் பிரகரண' த்தை அரதத்தர் நிந்தித்தது வேத நிந்தை செய்யவேண்டுமென்கிற கருத்துக் கொண்டே யன்றி வேறு கருத்துக்கொண்டன் றென்க. மேலெழுதிய விஷயங்களுக் குச் சார்பாகப் "பதி பசு பாச வாதம்" என்னும் நூலில் "தேகத்திற் சிறைப்பட்டிருப்பது சீவனே" "சீவன் வியாபக மென்பது குற்றம்" "வியாபகமான ஆன்மா அணு வாகாது" என்னு மகுடத்தின் கீழுள்ள விஷயங்களையும், "பசு சச்சிதாநந்த முடையதா?" என்னும் நூலயும் படித்தறிந்து தெளிந்திடுக.

இவர் இதோடு நில்லாமல் தமக்குச் சார்பாக மற்றொருவர் எழுதியதை மேற் கோளாக வேடுத்துக் காட்டுகின்றார். அவ்வெரித்துக்காட்டு அவைதிக மென்பது அதைப்படிக்கும் போதே தெரிந்து கொள்ளலாம். சுருதி, ஸ்மிருதி, புராண இதிகாசங்களையும், அவற்றிற்கு மாறில்லாத நூல்களையும் பிரமாணமாகக் காட்டாமல் தம்மைப் போல வேதாதி கலைகளுக்கும் யுக்தி யனுபவங் கட்கும் விரோதியான வொருவ ரெழுதியதை அத்வைத சித்தாந்திகளுக்கு எடுத்துக் காட்டாகக் காட்டுதல் கூடுமோ? தம்மவ ரெழுதியது தம்மவாக்குப் பிரம்ணமாமே யன்றி, பிறர்க்குப் பிரமாண மனறென்பது வாத வொழுங்கு தெரிந்தவர்க் கன்றோ தெரியும்? இவர்க்கு எங்ஙனக் தெரியப் போகின்றது? இவர்க்குச் சுயமாய்த் தெரியா விடினும் வாத வொழுங்கின்படி வாதிப்பவ ரெழுதுவதைக் கவனித்தாலும் தெரியுமே. அதுவும் தெரியாத விவருக்கு நாம் என்ன சொல்லப் போகின்றோம்!

இது காறுஞ் செய்து வந்த வாதத்தாலும், சுருதியாதிப் பிரமாணங்களாலும் பிரமம் யதார்த்தமாய் உபாதியை யடையவில்லையென்றும், கயிறு அரவாதல் போல் போலியென்றும் ஏற்படுவதால் இவரது ஆக்ஷேபம் தப்பு ஆக்ஷேபமாய் அதிலுஞ் சுருதி மார்க்க மறியாப் புறப்புறச் சமயத்தவர் ஆக்ஷேபமாய் நின்றமை காண்க; அதோடு இவ்வாக்ஷேபங் காரணமாக எழுந்த வியாபக வுயிர் அணுவாதலும், அணு உயிர் வியாபக மாதலுமான விஷயம் ஆக்ஷேபமாகவே நின்றமையின், இவரது மதம் வைதிகப் புறம்பான மதமும், ஆக்ஷேபமுள்ள மதமுமாய் நின்றமை காண்க.

## பூர்வபக்ஷம்.

"இந் நூலியற்றினவரைப் பற்றி யித்தென்னாட்டிலே மிக வியாபகம் பெற்று விளங்குகிற வித்வ சிகாமணி யொருவர் தாமியற்றிய பிரதந்தமொன்றிலே சிலவரிக ளெழுதி யிருப்பதைப் பலருமறியும் பொருட்டு அங்ஙனமே யெடுத்து ஈணடெழுது வாம். அது வருமாறு: -

"அவ்விதயாரண்ய ரெவ்வளவு யோக்கியமுடையா ரென்பதைக் கொஞ்சம் பரியாலோசிப்பாம். அவரும் அவருக்குப் பரம குருவான சங்கராசாரியரும் வேத பாஷ்யம் வேதாந்த பாஷ்யங்களைச் செய்திருந்த போதிலும் வாமசாக்க தந்திரங்

களால் மதுமாம்சங்களையே சேவித்தவர்களும் அசங்காத்ம வாதத்தால் ஸ்வேச்சா சார முள்ளவர்களுமாக அவர்களுடைய பிரபந்தங்களாலேயே துலங்குகிறபடியால் அவர்களை வேதபாஹ்யரெனவும் அசங்கரர், அவித்யாரண்யரெனவும் பட்டங்கள் கொடுத்தொதுக்கிவிடுவதே விவேகிகள் துணியாம்.

அன்னோர் மத்ய பானஞ் செய்தார்க ளென்பதை சங்கரவிஜயத்தாலறியலா மன்றியும் வித்யாரண்யர் செய்த சூதசம்ஹிதா வியாக்கியான முதலிய பிரகரணங்களா லவர் வாம சாக்தரென்பதும் ஸ்வேச் சாசாரமுடையா ரென்பதும் வெளியாகின்றன. இன்னும் அவர் செய்திருக்கும் பஞ்சதசப் பிரகரணத்தில் 'அப்ரவேஸ்ய சிதாத்மானம் ப்ரதக்வஸ்யம திஹம்சலுதிம் இச்சந்து கோடி வஸ்தூனி நபதோ கிரந்தி பேத்த:" என்கிற வசனத்தால் ஞானிகள் அஹங்காரத்தைச் சிதாத்மா வைப் பிரவேசிப்பிக்காமல் வேறாகப் பார்க்கிறார்கள். ஆகையால் கோடி வஸ்துக்களை இச்சிக்கட்டும். கிரந்தி பேதம் வந்து விட்டபடியால் அந்த விச்சை களினால் அவருக்கு யாதொரு கேடுமில்லை.'

என்று விளங்குகிறது. ஞானிகளுக்கு சகல இச்சையு முண்டா யிருக்கலா மென்று மேலிடமேயன்றி தியான தீபிகை முதலியவைகளிலும் கூறியுள்ளா ராகலின், அவரையும் அவருடைய குருக்களையும் ஸ்வேச்சாசாரப் பிரவர்த்தக சித்தாந்திகளாகிய வேதபாஹிய ரென்பதி லென்ன வாக்ஷேபமிருக்கிறது? இவ்விஷ யங்களை யறியாமையால் ஸ்மார்த்தர்களெல்லாம் அனியாயத்தி லன்னோரைத் தங்களாசாரியர்க ளென மயங்கி மடியா நின்றனர். வித்யாரண்யர் வேததுக்கும் சூத சம்ஹிதை பராசரஸ்மிருதி முதலியவற்றிற்கும் வியாக்கியானங்கள் செய்து முக்காற்பங்கு வைதிகத்தைக் கெடுத்தாரேனும் காற்பங்காவது அவரிடத்தி லுண்மை தேறும். சங்கராசாரியர் விஷயமோ வெனின், மணற் சோற்றில கல் லாராய்வதுபோ லாம். அவரால் ஸ்மார்த்தர்கள் பெற்றிருக்கும் பயன் யாது? எந்த ஸ்மார்த்த தருமங்களை அவர் தாபித்தனர்? அவற்றைக் கோபித் தழித்தவரே யாயின ராகையா ல் அவரை ஸ்மார்த்தர்க ளாதரிப்பது பாபம்! பாபம்!! அவரைக் காட்டினும் வைத்திய னாதிகளை யாதரிப்பது உசிதமாம். இப்படி விசார முகத்தால் சாமஞ்சசமாய்ப் போகும். சங்கராசாரியர் வித்யாரண்யர்களுடைய வாக்குகளுக்கு ஜீவிப்பில்லா தொழிந்தமையால் (அவர்கள் ஏகாத்மவாதமாகிய போலி வேதாந்த மதத்தைச் சாதிக்கவேண்டி) நேர்ந்தபடி எழுதியிருக்கும் ஸ்ரீருத்ரசூக்தபாஷ்ய விஷயத்தில் வித்யாரண்யருடைய பிரஸ்தாபம் பிரயோஜனப் படாமற் போயிற்று."

## சித்தாந்தம்.

இத் தென்னாட்டிலே மிக வியாபகம் பெற்று விளங்குகின்ற வித்துவ சிகாமணியின் பெயரையும், அவ ரெழுதிய கிரந்தத்தின் பெயரையும் பலரு மறியுமாறு அரதத்தர் எழுதாமற் போனதற்குக் காரணந் தெரிய வில்லை. குஜிலிக் கடைப் புஸ்தகத்தில் "திருவெண்காடு ஆறுமுக சுவாமிகளால் பார்வை யிடப்பட்டு" என அப்புஸ்தகங்களையச்சிடுவிப்பவர் எழுதிக் கொள்வது போன்று தாமே 'அவ்வித்யாரண்யர்' என்ற தொடக்க மான ஒரு வசனத் தொடரை யெழுதி 'இத்

தென்னாட்டிலே மிக வியாபகம் பெற்று விளங்குகிற வித்துவ சிகாமணி யொருவர் தாமியற்றிய பிரபந்தமொன்றிலே சிலவர்களெழுதியிருப்பதைப் பலரு மறியும் பொருட்டு அங்ஙனமே யெடுத்து ஈண் டெழுதுவாம்' என்று வரைந்தனரோ! அல்லது நாம் கூறும் வித்துவ சிகாமணி வித்வத்துவம் உள்ளவ ரன்றே; வித்வத்துவம் இல்லா சவரை நாம் வித்துவ சிகாமணி யென்று கூறின், நம்மைப் பலரு மிகழுவார் களே யென்றஞ்சிப் பெயரைக் கூறாமல் வாளா வித்வசிகாமணி யென்றும், அவ ரெழுதிய நூல்கள் பிறரால் மறுக்கப்பட்டு வருகின்றனவே; அதற்குப் பதிலுமின்றே யெனப் பயந்து புஸ்தகத்தின் பெயரைக் கூறாமல் ஓர் பிரபந்த மென்றும் எழுதி விட்டனரோ? இதுவல்லாவிடில் வேறு யாது காரணமோ அறியோம்.

இனி ஊர்பேரின்றி யித்தென்னாட்டிலே குதிரைக் கொம்பு, ஆமை மயிர், ஆகாயத்தாமரை முதலியவைகளைப்போல மிகப் பிரசித்தி பெற்று விளங்கும் வித்துவ சிகாமணி யெழுதிய விஷயத்தைச் சற்றுக் கவனிப்பாம். அவ்வித்துவ சிகாமணி 'அவ்வித்யாரண்யர் எவ்வளவு யோக்கியதை யுடையாரென்பதைக் கொஞ்சம் பரி யாலோசிப்பாம்.' என்றார். மேல் அரதத்தருக்குக் கொடுத்த விடையினால் அந்த வித்தியாரண்ய சுவாமிகள் வேதமார்க்கத்திற்குச் சிறிதுந் தவறாத வைதிகர் அல்லது அத்வைதியென்று பெறப்பட்டமையும், வைதிகரான வித்யாரண்யருடைய யோக்கியதையைப் பரியாலோசிக்கப் புகுந்த அவ்வித்வ சிகாமணி அவைதிகரானா ரென்றமையு வெளிப்பட்டமை காண்க.

'அவரும் அவருக்குப் பரம் குருவான சங்கராசாரியரும் வேத பாஷியம் வேதாந்த பாஷியங்களைச் செய்திருந்தபோதிலும் வாம சாக்த தந்திரங்களால் மது மாம்சங்களையே சேவித்தவர்களும், அசங்காத்ம வாதத்தால் ஸ்வேச்சாசார முள்ளவர்களு மாக அவர்களுடைய பிரபந்தங்களாலே துலங்குகின்றபடியால் அவர்களை வேத பாகியரெனவும், அசங்கரர் அவ்வித்தியாரண்யர் எனவும் பட்டங் கொடுத் தொதுக்கி விடுவதே விவேகிகள் துணிபாம்' என்றார். வித்தியாரண்யரும், சங்கராசாரியரும், வேதபாஷியம், வேதாந்த பாஷியங்களைச் செய்தும், வேத விரோதமான பௌத்தாதி மதங்களைக் கண்டித்தும், வேதத்தை யாதாரமாகக் கொண்டு அதற்கு விரோதமா யொழுகும் மதங்களை மறுத்துப் பின்னர் அதிலுள்ள குற்றத்தை விட்டுக் குணமா யுள்ளவைகளைக் கைக் கொண்டொழுகினால், அம்மதங்கள், அத்வைதத்தை யடைதற்குச் சாதனமா மென்று பிரவசனஞ் செய்து வந்தது போல, வாம சாக்த தந்திரங்களை முன்னர்க் கண்டனஞ் செய்து, அதிலுள்ள தவறுகளைத் தெற்றெனப் புலப்படுத்திப் பின்னர் அத்வைதத்தை யடைதற்குச் சாதனமாகக் கொலை செய்தலும், மாமிசம் புசித்தலும், கள்ளுண்டலும் விட்டு அத் தந்திரங்களை அனுஷ்டிக்க வேண்டுமென்றார்களன்றி மதுமாமிசங்களைச் சேவிக்க வில்லை; சேவிக்குமாறு சொல்லவு மில்லை. வேதோக்தமான அத்வைத மதானு சாரிகளான வித்தியாரண்யரும் சங்கராசாரியரும் அனதிகாரிகளுக்காக ஏற்படுத்தப் பட்டிருக்கும் ஆகமங்களி லொன்றான வாம சாக்தாதி மதங்களைச் சேவித்தார்க ளென்பது பிரமாணமில்லாப் பேச்சென்க.

## சங்கர விஜயம், ஆறாமத்தியாயம், பரமதவாது.

“பின் அங்கிருந்து பதுமபாதர் முதலிய சில மாணாக்கரோடு சாத்திரங்களை யெடுப்பித்துக்கொண்டு காசிக்கு வருகையில் கேதாரம், இரேவணம், சுவாலாமுகி, நேபாளம் முதலிய திருப்பதிகளி லிருந்து வந்த அகோரர், இரசேச்சுரர், நகுலேச்சுரர், பசுபதி, சித்தநாதர், சித்துவிலாசர், ஸ்ரீநாதர், உக்கிர வைரவர், கபாலிபிக்ஷு, சபரேச்சுரர்,'மிருகேந்திர நாதர், வாமகேச்சுரர், ஒட்டியாண சித்தர், சாங்கியேச்சுரர், கோவர்த்தனர், சகந்நாதர், மிஹிராதித்தர், அருக்கதாசர், முதலிய அவ்வச்சமயாசிரியர்; பாசுபதம், காபாலிகம், வீரேசம், சித்த ரகசியம், தேவி பாரம்யம், மந்திர வித்தியேசுவ ரீயம், சாத்தேயம், இராதா கிருஷ்ணம், சௌரம், காணாபதம், வைரம், குபேரம், காலவாதம் முதலிய மதங்களை விளக்கஞ் செய்து வேறு வேறு சில சில மாணாக்கரோடும் சாத்திரங்களோடும் கூட்டங் கூட்டமாக வந்து; அரித்து வாரம், பிரமகபாலம், காளி கட்டம், ஆரியா வருத்தம், பாடலிபுரம், சிந்து கருப்பம், இந்திரப் பிரத்தம், அயோத்தி, பிரமவருத்தம், விஷ்ணுபாதம், நவத்துவீபம், உத்தரகௌடம், பிரயாகை, சித்திர கூடம் முதலிய க்ஷேத்திரங்களிலும் பட்டணங்களிலும் சபை கூடி, பதுமபாதர் முதலிய சங்கரர் மாணாக்கரோடு சபதஞ் செய்து வாதிட்டு, அத்துவிதாசிரியர் உத்திகளாற் றோல்வி யடைந்து தத்தம் மதாபி மானங்களை யொழித்து, சாந்தவைராகங்களை யடைந்து, அச்சங்கரமுனிவரை வணங்கி, அத்துவித வுபதேசம்பெற்று, தத்தம் மாணாக்கரோடும் அத்துவிதிகளாய், அந்தப் பாஷிய முதலிய நூல்களைப் பெற்றுத் தத்தம் மிடஞ் சேர்ந்து, குருவின் கட்டளைப்படி பாஷியத்தினை விளக்கி வந்தனர்.”

என்றும்,

## ஷை பத்தாமத்தியாயம், மண்டனர் சந்நியாசம்.

“அப்பால் சங்கரர் மாணாக்கரோடு புறப்பட்டு முறையே அங்கங்கே ஞான நூலினைப் பரவச் செய்து ஸ்ரீ சைலத்தை யடைந்தனர். அவ்விடத்துப் பாதாள கங்கையில் முழுகி ஸ்ரீ பிரமராம்பிகை மல்லிகார்ச்சுனப் பிரானைத் தரிசித்து, அங்கு “சிகரகலா யந்திரப்" பிரதிட்டை செய்து, கிருஷ்ணையின் கரையி லுள்ள பாசுபத சாத்தேய வைஷ்ணவ முதலிய மதவாதி யரைத் தோல்வி யடையச் செய்து.”

என்றும்,

## ஷை பதினைந்தா மத்தியாயம், சங்கரர் பிரசங்கம்.

“இலிங்கந் தரித்தலாகிய வீர சைவ விரத மொன் றொழியச் சைவத்தை அனுட்டிக்கின்றோம். சக்கிராங்க மென்னும் வீர வைணவ தீக்ஷை யொழிய விஷ்ணு பக்ஷம் எங்களுக்கு விரோதமான தல்ல. சடை தரித்தல் எலும்பை யணிதல் முதலிய தோஷ மொழியக் கபாலி மூர்த்தியைப் பூசிப்பது எமக்கு உடம்பாடே. மது மாமிசங்க ளொழியச் சத்தியை யுபாசித்தல் எங்கள் மதமேயாம்”

என்றும்,

## ஷை ஷை சங்கார் தேச சஞ்சாரமும், வாதும்.

"சங்கரர் அப்பால் இராமேச்சுர யாத்திரை செய்து, சாத்தேயத்தை மறுத்துச் சுத்த சாத்தேயத்தை நிலை நிறுத்தி"

என்று முள்ள விஷயங்களால் மது மாமிசங்களைச் சேவித்தார் என்று இம்முயற் கொம்பு வித்துவான் எழுதியது பொய்மை யென்பது போதரு மென்க.

## அத்தியாத்மோபநிஷத்.

அப்படிப்பட்ட அத்துவயப் பிரம பர தத்துவமாயும், விகார மற்றதாயு மிருக்கின்ற சிதாத்துமாவினிடத்தில் பேத மேது? ஏகாத்துமா வாகிய பர தத்துவத்தில் அந்தப் பேத மெப்படி யிருக்கக் கூடும்?

## மாண்டூக்கியோப நிஷத் 7- வது வாக்கியம்.

ஜாக்கிர முதலிய அவஸ்தை யற்றது, விகார மற்றது, மங்கள கரமானது, மூன்றுவித பேதமற்றது. (சுசாதி விசாதி சுவகத பேத மற்றது.)

## நீராலம் போபநிஷத்

இரண்டாவ தற்றதாயும், சகலவித வபாதியற்ற தாயும்..... இருக்கிற சைதன்னியமே பிரமம்..

## உத்தரகீதை.

சுசாதீய விசாதீய சுகத பேத ரகிதமான பிரமம்.

## பீரமகீதை ஐதரேய உபநீடதாரீத்தம்.

சின் மாத்திரமா யுள்ள வெறுஞ் சிவனே திகழ்வான் யாதுக்கும், முன் மாத்திரமும் வேறில்லை மூற்று யவனே மொழி வுற்ற, நன்மாத்திரமா யான்மா வென் றுரைக்கு நாமத்தினை யுடையான். (2)

என்று முள்ள பிரமாணங்களினால் ஆத்துமா, அல்லது சிவம் ஒன்றே யுள்ள தென்றும், அது கூட்ட மில்லாத அசங்க மென்றும், அதைத் தவிர இரண்டாம் பொருளின்றென்றும் பெறப்பட்டமையான், அசங்காத்மவாத மென் றிகழ்ந்தது சாஸ்திர ஞான மில்லாமையும் வேத பாஹியத் தன்மையுமா மென்க.

அவ்வித்துவான் அசங்காத்துமா என்றதின் பொருளைச் சுருதியாதிகளின் சம்மதப்படி விசாரியாமையால் விபரீதமாய்ப் பொருள் கொண்டு மயங்கிப் போனார். பிரமத்தின் பரியாய நாமங்களி லொன்றான ஆத்துமா அசங்கமா யிருப்ப துண்மை யே. சங்க மென்றால் சம்பந்தம். இந்தச் சம்பந்தம் சஜாதீய, விஜாதீய, சுவகத பதார்த்தங்களா லுண்டாகின்றது. மரம் மரத்துடன் சம்பந்தம் சஜாதீயம்; மரம் கல்லுடன் சம்பந்தம் விஜாதீயம்; மரம் தன்னிடத்தினின்றும் தோற்றிய அரும்பு, பூ, பிஞ்சு, காய், பழங்களுடன் சம்பந்தம் சுவகதம். பிரமம் அல்லது ஆத்துமா ஏகமா யிருப்பதாலும் பரிபூரணமா யிருப்பதாலும் பிறி தொரு ஆத்துமா இருக்க நியாய மில்லை. ஆதலால் ஆத்துமாவுடனே பிறி தொரு ஆத்துமா சம்பந்தப்படு மென்று சொல்வது கூடாது; கூடாமையால் சஜாதீய சம்பந்த மில்லை. விஜாதீய மாவது ஆத்துமாவுக்கு அநாத்துமா. ஆத்துமா பரிபூரணமா யிருத்தலால் அநாத்தமா இருக்க இடமில்லை. இருக்கு மெனின் ரச்சுவின் கண் சர்ப்ப மிருத்தல் போலாம். சர்ப்பம் பொய் யாதலால் பொய் யுடன் மெய் சம்பந்தப் படாது. இதற்குத் திருட்டாந்தம் ரச்சு சர்ப்பத் துடன் சம்பந்தப் படாமைபோலாம். சர்ப்ப மென்ப தொன் றிருந்தா லன்றா அத்துடன் மெய்யாகிய ரச்சு சம்பந்தப் படப்போகின்றது? இத்திருட்டாந்தத்தின் படியே சத்தாகிய ஆத்துமா அசத்தாகிய அநாத்துமா வுடனே சம்பந்தப் படாது. ஆதலால் விஜாதீய சம்பந்த மென்பதும் மறுக்கப் படுகின்றது. இனிச் சுவகத மென்பதும் ஒவ்வாது. யாங்ஙன மென்னின் மரம் அவயவமுடைய தாகலின் அதினின்றும் அரும்பு முதலியன வுண்டாகலாம். பிரம மாகிய ஆத்துமா நிரவயவ முடைய தாகலின் அதினின்றும் பிற பொரு ளுண்டாகா. உண்டாகாது போகவே சுவகத சம்பந்தமும் சொல்லுதல் கூடாது. இவ்வித நியாயங்களினால் ஆத்துமா அசங்கனென் றேற்படுகின்றது.

வேத விரோத மில்லாத அசங்காத்ம வாதம் அல்லது வைதிக மார்க்கத்தில் ஸ்வேச்சா சாராயும், மேற் காட்டி யுள்ள பிரமாணங்களின் படி அத்தியாசமா யிருக்கிற சீவேச பேதத்தை யொழித்து,

*நடந்தாலு மிருந்தாலு நவின்றாலுந் துயில் கொண்டு*
*கிடந்தாலும் விழித்தாலும் கிளர்முடி மன்னவர் முதலோர்*
*தொடர்ந்தாலும் தொழுதாலும் துதித்தாலு மவமதித்துக்*
*கடந்தாலு மெய்ஞ்ஞானி கமலவிலைப் புனல் போல்வான்.* (25)

என்று சூத சங்கிதை சமாதி விதியிற் கூறிய படி சகச நிஷ்டாபா ராயு மிருந்த வித்தியாரண்யரையும் சங்கரரையும் ஊர் பேரில்லாது இத் தென்னாட்டிலே பிரசித்தமா யுள்ள முயற்கோடு வித்துவான் 'வேதபாகிய ரெனவும் அசங்கரர் அவ்வித்தியாரண்யர் எனவும் பட்டங் கொடுத் தொதுக்கி விடுவதே விவேகிகள் துணிபாம்.' எனக் காரணமின்றி யெழுதியது விசாரணை யின்மையையும் அயோக்கியதையும் காட்டுகின்றது.

'அன்னோர் மத்தியபானஞ் செய்தார்க ளென்பதைச் சங்கர விஜயத்தா லறியலாம்.' என்றார். அன்னோ ரென்பது வித்தியாரண்யரையும், சங்கரரையுங் குறிக்கின்றமையின், இவ்வித்துவ சிரோன்மணி, விஷயங்களைப் புரட்டுவதிலும்

ஆட்களை மாறாட்டஞ் செய்வதிலும் கூட மகா வித்வ சிரோன்மணி போலும்! சங்கர ரிருந்த காலத்திற்கும், வித்தியா ரண்யர் இருந்த காலத்திற்கும் அநேக நூற்றாண் டுகள் வித்தியாசமாக விருத்தல் அந்த வித்தியா ரண்யரது சரித்திரத்தினாலும், அவர் செய்துள்ள அத்வைத சித்தாந்த சாஸ்திரங்களினாலும், மரபு விளக்கத்தாலும் நன்கு வெளியாக, அதை யறியாமலும் அறிந்தாரிடத்துக் கேளாமலும் சங்கர விஜயத்தில் இவர் கூறு மாறு இப்பாகத்திலிருக்கிற தெனக் கூறாமலும் ஸ்வகபோல கற்பனை யாக 'அன்னோர் மத்திய பானஞ் செய்தார்கள்' என்று கூறல் பொய்மையிற் பொய்மையா மென்க. 'அன்றியும் வித்தியாரண்யர் செய்த சூதசங்கிதா வியாக்கியான முதலிய பிரகாரணங்களால் அவர் வாமசாக்த ரென்பதும், ஸ்வேச்சாசாரமுடையா ரென்பதும் வெளியாகின்றன' என்றார். இதுவும் ஸ்வகபோல கற்பனை யென்றே கொள்க. அன்றெனில், சூதசங்கிதை முதலிய பிரகரணங்களிற் காட்டுக. வாம சாக்த ரென்பதற்கும் ஸ்வேச்சாசார முடையா ரென்பதற்கும் மேற்கூறியுள்ள சமாதானத் தை ஈண்டமைத்துக் கொள்க.

‘இன்னும் அவர் செய்திருக்கும் 'பஞ்சதசப் பிரகரண' த்தில் 'அப்ரவேஸ்ய சிதாத்மானம் பிரதக்வஸ்யம் திஹம்சலுதிம், இச்சந்து கோடி வஸ்தூனி நபோததோ கிரந்தி பேத்த:' என்கிற வசனத்தால் 'ஞானிகள் அகங்காரத்தைச் சிதாத்மாவைப் பிரவேசிப்பிக்காமல் வேறாகப் பார்க்கிறார்கள். ஆகையால் கோடி வஸ்துக்களை யிச்சக் கட்டும், கிரந்தி பேதம் வந்து விட்டபடியால் அந்த இச்சைகளினால் அவருக்கு யாதொரு கேடு மில்லை' என்று விளங்குகிறது. ஞானிகளுக்குச் சகல விச்சையு முண்டாகலா மென்று மேலிடமே யன்றித் தியான தீபிகை முதலியவைகளிலும் கூறியுள்ளா ராகலின், அவரையும் அவருடைய குருக்களையும் ஸ்வேச்சா சாரப் பிரவர்த்தக சித்தாந்திகளாகிய வேத பாகிய ரென்பதில் என்ன ஆக்ஷேப மிருக்கிறது?' என்றார். இதனால் இச்சசவிஷாண வித்துவ சிரோன மணிக்கு ஞான சாஸ்திரப் பயிற்சி சிறிது மின்றென விளங்குகின்றது. உண்டேல் தமது அறியாமையை யாவருங் கண்டிகழுமபடி யிவ்வா றெழுதார்! எழுதார்!!

'ஞானிகள் அகங்காரத்தைச் சிதாதமாவைப் பிரவேசிப்பிக்காமல் வேறாகப் பார்க்கிறார்கள்.'என்ற வாக்கியத்தில் அகங்காரப் பிரதிபிம்பனா யுள்ள சிதாபாச (சீவன்) னைச் சாட்சியா யுள்ள சிதாத்மா (கூடஸ்தன்) வைப் பிரவேசிப்பிக்காமல் அதாவது சுத்திகா ரசிதம் போன்று ஒருமைப் பாடாய்க் காணாமல் நீரிற் றோன்றாம் பிரதி பலனம் போல வேறாகக் கண்டு சிதாபாசன் பொரு ளன்று, கற்பனையா யுள்ளவ னெனக் கழித்து, அச்சிதாபாசனுக்கு அதிஷ்டானமா யுள்ள கூடஸ்தனைக் கண்டு அதாவது. கூடஸ்தனாய் நின்று அதிஷ்டானத்தையும் ஆரோபத்தையும் வேறாகக் காண்கிறார்க ளென்று பொருள் படுதலையும், பஞ்சதசப் பிரகரணம் சித்திர தீபிகையில் “தனக்கு ஒரு காலும் சம்சாரமில்லை, சம்சாரமும் சம்சாரியும் கற்பித மென்கிற விவேகமே யஞ்ஞானத்தைத் தள்ளுகிறதற்கு உபாயம்" என்றும், "இன்று முதல் அத்தியாசத்தை விட்டு ஆத்மாவையும், அகங்காரத்தையும் வேறு கண்டிரு" என்றும், ஷெ திருப்தி தீபிகையில் "காவியம் தர்க்கம் வேளாண்மைகளிலே விழுந்த மனதிற்கு நிதித்தியாசனங் கூடாது" என்றும், "இந்திர ஜாலத்திற் கந்தர்வ நகரத்தைப் பார்க்கிறவன் ஒரு போகத்தையு மிச்சியாமல் சிரித்துக்கொண்டு போகின்றது போலச் சாட்சாத் காரம் வந்தவனுக்குச் சகத்துப் பொய்யாய்ப் போனபடியினால விடயமும்

புசிக்கிறவனு மில்லாமல் எண்ணெ யற்ற விளக்குப்போ லாசை சங்கற்ப மெல்லா மணைந்துபோம்." என்றும், "ஞானிக்கு மூன்று சரீரத்தி னத்தியாசமும் போனபடியினால் மூன்று சரீர தாபங்களும் இவனைத் தாபப்படுத்தாது" என்றும், "இத்தனையும் நாமல்லவோ கொன்றோம் என்று படுகளம் பார்க்கிற ராஜாவுக்கு அதனால் திருப்தியே யொழியப் பயமில்லை. இப்படிப்பட்ட போத சூரனுக்குத் தேகாதிகளிடமாய் வருகின்ற பிரவிர்த்தியினாற்றான் நிவிர்த்தியினாற்றான பிரயோசன மேது?" என்றும் இன்னும் இவைபோல் வரும் வாக்கியங்களோடு "ஆகை யால் கோடி வஸ்துக்களை யிச்சிக்கட்டும், கிரந்திபேதம் வந்து விட்டபடியால் அந்த விச்சைகளினால் அவருக்கு யாதொரு கேடு மில்லை" என்ற வாக்கியத்தையுங் கூட்டிப் பார்க்குமாற்ற லின்றியும், அவ்வாக்கியத்தின் பொருளைக் கவனிக்கும் புத்திக்கூர்மை யின்றியும், மனதிற் றோன்றியபடி 'அவரையும் அவருடைய குருக்களையும் ஸ்வேச்சாசாரப் பிரவர்த்தக சித்தாந்திகளாகிய வேதபாகிய ரென் பதில் என்ன ஆக்ஷேபமிருக்கிறது' என்றெழுதியது வித்வத் திறத்தி னிலக்கணம் போலும்! எப்பொரு ளெத தன்மைத் தாயினும் அப்பொருளில் மெய்ப் பொருளைக் காண்பவராயும், பொரு ளல்லவற்றைப் பொரு ளன்றென்று கழித்துப் பொருளைப் பொரு ளாகக் கொள்பவ ராயுமுள்ள அத்வைத ஞானிகள் இக்கமடரோம வித்துவ சிரோன் மணி கூற்றின்படி ஸ்வேச்சாசாரப் பிரவர்த்தகராயும் வேதபாகியராயு மாகும்போது சுருதி ஸ்மிருதி புராணே திகாசங்களுக்கும், யுக்தி யனுபவங்களுக்கும் விரோதமாக உலகைச் சத்தென மருண்டு, சத்தி னிலக்கணத்தை யறியு மாற்ற லின்றி மயங்கித் தியங்கிக் கிடந்த துவைதிகளையே வேத பாகிய மாயும் இவரது சித்தாந்தமாயு முள்ள நூல்களி லொன்றான உண்மை நெறி விளக்கம் ஞானிகளென மருண்டு,

"பாதகங்கள் செய்திடினும் கொலை களவு கள்ளுப்பயின்றிடினும் நெறி யல்லா நெறி பற்றி வரினும், சாதி நெறி தப்பிடினுந் தவறுகள் செய்திடினும் தனக்கெனவோர் செய லற்றுத் தானதுவாய் நிற்பின்" என்று கூறுகின்றதே. இது மாத்திரம் நியாயமாமா? பாதகங்கள் செய்தவர்களும், கொலை செய்தவர்களும், களவு செய்தவர்களும், கள் குடித்தவர்களும், வருணாசிரம, தருமங்களை விட்டவர்களும் ஸ்வேச்சாசாரப் பிரவர்த்தகரும் வேதபாகியரும் ஆகாரோ?

## ஒழிவிலொடுக்கம் அவத்தைத்தன்மை.

*"சாவே பெருநோன்பாய்ச் சந்தற்ற சத்தியர்க்குத்*
*தேவாரங் காலந்தியானமறம் - பாவம்*
*விதிவிருத்தம் பேசுகைக்கு வேதாகமங்கள்*
*அதிசயிக்கு மேலுரைப்பாரார்."*

## பிரபுலிங்கலீலை மருளசங்கரதேவர்கதி.

*வல்லனென்றிருப்பினு மிருக்கும்வன்மையொன்*
*றில்லனென்றிருப்பினுமிருக்குமெள்ளுறப்*

*புல்லனென்றிருப்பினுமிருக்கும்புண்ணிய*
*நல்லனென்றிருப்பினுமிருக்கும்ஞானியே.*

## சிவஞானவள்ளலார்.

*கறவங்குடித்தாலுகாயிறைச்சிதின்றாலும்*
*குறவருடன்கூடிக்குனித்தாலும் - இறைவனே*
*தானென்னுந்தன்மைசலியாருலகர்க்கு*
*நானென்று சொல்லிநடிப்பார்.*

## அவிரோதவுந்தியார்.

*ஆண்டகையீசனையின்றி யொன்றின்மையால்*
*வேண்டிய செய்வாரென் றுந்தீபற*
*விதிநிடேதங்களற்றுந்தீபற.*

இந்தப் பிரமாணங்களினால் ஞானிகட்கு விதி விலக்குச் சொல்லப்படா தென்றும், இது வேதாகம சாஸ்திர சம்மதமென்றும், அவர்கள் செய்வ தெல்தெல் லாம் தவமாகு மென்றும் ஏற்படுவதால் அப்படிப்பட்ட ஞானிகளுக்கு விதி விலக்கு கள் கற்பிப்பது சாஸ்திர மரபு தெரியாமையே யாம்; அதோடு தமது சித்தாந்தமும் தெரியாமையேயாம். இவ்வித்துவ கோலாகலர் கூறுகின்றபடி அது குற்றமேயாயின் அதிபத்த நாயனார், சிறுத்தொண்ட நாயனார், கண்ணப்ப நாயனார், அப்பூதி நாயனார், மூர்க்க நாயனார், சத்தி நாயனார், முனையடுவார் நாயனார், செருத்துணை நாயனார், இடங் கழி நாயனார் முதலியவர்களது மீன்பிடித்தல், பிள்ளையைக்கொன்று சமைத்தல், கொலை செய்து மாமிசம் புசித்தல்; வேளாண் குலத்திற்பிறந்த திருநாவுக்கரசு சுவாமிகளைப் பிராமணர் வணங்கல், சூதாடுதல், நாவையறுத்தல், சத்துருக்களைச் சங்கரித்தல், மூக்கையறுத்தல், திருடுதல் முதலிய செய்கைகளைக் குறிப்பாக நிந்தித்துக் குற்றங் கூறியதாகுமே. இவர்க்கு யதார்த்தமாய்ச் சங்கரா சாரியரையும், வித்தியாரண்ணி யரையுந் தூஷிக்க வேண்டு மென்கிற எண்ண மில்லை. திருத்தொண்டர் புராணத்தி லுள்ள நாயன்மார்களைத் தூஷிக்க வேண்டு மென்றதே கருத்தாகும். அதை நேரே காட்டாமல் சங்கரா சாரியர் பேரிலும், வித்தியா ரண்ணியர் பேரிலும் வைத்துப் போக்குக் காட்டினா ரென்க.

## சூதசங்கிதை சமாதிவிதி.

*நடந்தாலும் இருந்தாலும் நவின்றாலும் துயில் கொண்டு*
*கிடந்தாலும் விழித்தாலும் கிளர்முடி மன்னவர் முதலோர்*
*தொடர்ந்தாலும் தொழுதாலும் துதித்தாலும் அவமதித்துக்*
*கடந்தாலு மெய்ஞ்ஞானி கமலவிலைப் புனல் போல்வான்.* (25)

என்னு மிச்செய்யுளால் தாமரையிலையின்கண் நீர் பொருந்தி யிருப்பது போற் றோன்றினும் எவ்வாறு பொருந்துத லின்றோ, அவ்வாறே, ஞானி உலக விஷயங்களிற் பொருந்தி யிருப்பதுபோற் றோன்றினும் யதார்த்தத்தில் பொருந்துத லின்றென்றும்,

ஷை ஷை

*இனைய ஞானிதனைப் பரனென்றெண்ணா தேவனவமதித்தான்*
*அனையபாவி நெடுங்காலம் அள்ள லனைத்தும் அழுந்திடுவான்.* (26)

என்னு மிச் செய்யுளால் இப்படிப்பட்ட ஞானியை யவமதித்தவன் அநேக நாள் நரகத்தில் முழுகுவானென்றும்,

## பிரமகீதை கேனோபநிஷத்.

*பரமாத்துவித ஞானியே பரதேவதைதான் அவனேயித்*
*திரமாமுத்தியான் இங்குச்செப்பும் பொருள் செய்வினையாலும்*
*உரமாந்ததீசி கௌதம னாலுண்டாஞ்சா பவுரையாலும்*
*கரமா மநுடர் நெஞ்சதனில் காதல் செய்யாதொருகாலும்.* (56)

என்னுமிச் செய்யுளால் பரமாத்துவித ஞானியைத் ததீசியின் சாபத்தாலும் கௌதமரின் சாபத்தாலும் வஞ்சனையுள்ள மனிதர் விரும்பாரென்றும் பெறப்படு தலின், அத்வைத ஞானிகளை யிகழ்ந்த இவ்வேதபாகியரும், அநேக நாள் நரகத்தில் முழுகுபவரும், ததீசி கௌதம சாப வயப்பட்ட வஞ்சனை யுள்ள மனிதரு மானாரென்க.

இவ்விஷயங்களை யறியாமையால் 'ஸ்மார்த்தர்களெல்லாம் அனியாயத்தி லன்னோரைத் தங்களாசரியர்களென மயங்கி மடியா நின்றனர்' என்றார். வேத மார்க்கத்துக்குச் சிறிதும் விரோதமின்றி யொழுகிய சங்கரரையும் வித்தியாரண்ய ரையும் ஸ்மார்த்தர்கள் 'அனியாயத்தி லன்னோரைத் தங்களாசிரியர்களென மயங்கி மடியாநின்றனர்.' என்று வேதபாகிய மதத்தி லொழுகும் இவ் வித்துவ சிரோன்மணி கூறுதல் திரிபுணர்ச்சியா மென்க. இவர் திரிபுணர்ச்சி யுள்ளவ ரென்பது மேலெழுதிய விஷயங்களால் நன்கு விளங்கும். திரி புணர்ச்சி யுள்ள அவைதிக மதஸ்பான விவர்: திரி புணர்ச்சி யில்லாத சங்கர வித்தியாரண்யர்களை நிரதிசய வின்பத்தை யடைய ஆசிரியர்களாகக் கொண்ட ஸ்மார்த்தர்களை 'மயங்கி மடியாநின்றனர்' என்று கூறுதல் வேதப்புறப் புறச் சமயத்தவரான கிறிஸ்துமதத்தவர் ஆரியர்களை அஞ்ஞா னிகளென் றழைப்பதுபோ லிருக்கிறதென்க.

'வித்தியாரண்யர் வேதத்திற்கும், சூதசங்கிதை, பராசரஸ்மிருதி முதலியவற்றி ற்கும் வியாக்கியானங்கள் செய்து முக்காற் பங்கு வைதிகத்தைக் கெடுத்தாரேனும், காற் பங்காவது அவரிடத்தி லுண்மை தேறும். சங்கராசாரியர் விஷயமோவெனின்,

மணற்சோற்றிற் கல்லாராய்வது போலாம்.' என்றனர். சர்த்தச வித்தைகட்குக் கட்டுப் பட் டொழுகும் எந்தவைதிகரும் வித்தியாரண்யர் வேதத்திற்கும் சூதசங்கிதை முதலியவற்றிற்கும் வியாக்கியானங்கள் செய்து முக்காற்பங்கு வைதிகத்தைக் கெடுத்தாலுங் காற்பங்குவைதிகம் தேறுமேன்று புகலுதல் ஒருபோது மின்று. அந்த வித்தியாரண்யர் செய்துள்ள வியாக்கியானங்களும் வேதாந்த நூற்களும் முற்றும் வைதிகமே; அவைதிக வாசனை அவற்றில் அணுத் துணையு மின்றென்று அவை களே சான்று புகல்கின்றன. வித்யாரணியர்: சங்கராசாரியர் பரம்பரையைச் சேர்ந்தவரும், அவர் வழிப்பட்டவருமானதால், சங்கரர் அபிப்பிராயமும் வித்தியார ணியர தபிப்பிராயமும் அணுத்தினையும் பேத மின்று. இங்ஙனமாக அவ்விருவ ரையும் பேதப்படுத்தி யிகழ்ந்தமை அதிலும் காரணமின்றி யிகழ்ந்தமை யறியாமை யின் பெருக்கமாமென்க!

'அவரால் ஸ்மார்த்தர்கள் பெற்றிருக்கும் பயன் யாது? எந்த ஸ்மார்த்த தர்மங் களை யவர் ஸ்தாபித்தனர் பாவம்! பாவம்!!' என்றார். வைதிகர்களான ஸ்மார்த்தர்கள் பெற்றிருக்கும் பயன் அவைதிகரான விவருக்கு எப்படித் தெரியும். அவரது சுருதி ஸ்மிருதி புராண வியாக்கியானங்களும் நூல்களுமே ஸ்மார்த்த தருமங்களை நன்கு விளக்க, அதை விவர் அறியும் விரகின்றிப் 'பாவம் பாவம்' என்றது இவருடைய பெரும் பாவப் பெருக்கே யாமென்க! 'அவரைக்காட்டிலும் வைதியனாதிகளை யாதரிப்பது உசிதமாகும்' என்றார். வைதியனாதிகளும் அவருடைய பாஷியத்திற்கு மாறின்றி யிருத்தலின், அதினாலும் இவருக்கு ஏதுஞ் சாதக மின் றென்க. அதில் ஏதேனும் விரோதமா யிருப்பின் அது அப்பிரமாண மாவதோடு அதை ஸ்மார்த்தர்கள் ஒருபோதும் எற்றுகொள்ளாரென்க. விரோதமின்றி யிருத்தலினாற்றான் யாவரும் ஏற்றுக் 'கொண்டிருக்கிறார்க ளென்க.

'இப்படி விசார முகத்தால் சாமாஞ்சசமாய்ப் போகும் சங்கராசாரியர் வித்தியா ரண்யர்களுடைய வாக்குகளுக்கு ஜீவிப்பில்லா தொழிந்தமையால் (அவர்கள் ஏகாத்மவாதமாகிய போலி வேதாந்த மதத்தைச் சாதிக்க வேண்டி) நேர்ந்த படி யெழுதி யிருக்கும் ஸ்ரீ ருத்திர சூத்திர பாஷ்ய விஷயத்தில் வித்தியாரண்யருடைய பிரஸ்தாபம் பிரயோசனப்படாமற் போயிற்று' என்றா ரன்றோ? விசார முகத்தால் பார்க்கு மிடத்து இவரது வாக்கு ஜீவிப் பில்லா தொழிந்ததே யன்றிச் சங்கர வித்தியாரண்யர்க ளுடைய வாக்கு ஜீவிப் பில்லாது போக வில்லை. அது எஞ்ஞான்றும் வச்சிர ஸ்தம்பம்போல் நிலை பெற் றிருப்பது இவ் வாத முகத்தாலே யே நன்கு விளங்கும். ஏகான்ம வாதமே நிலையா யுள்ளது; எனையவை சிறிதேனும் நிலை பெறா வென்று; "வேதாந்தி" யென்பவர் "சித்தாந்திகளும் ஏகாத்தும வாதிகளே" என்றெழுதிய புஸ்தகத்திற்குப் பதிலெழுதாமல் அடியுண்டவன் அலறுவது போன்று, 'ஏகாத்தும வாதிகள், ஏகாததும வாதிகள்' என்றெழுதுதல் வெட்கத்திலும் வெட்க மென்க! ஸ்ரீ ருத்திர சூத்திர பாஷிய விஷயத்தில் வித்யாரண்யரது பிரஸ்தாபம் பிரயோசனப்படாது போயது ஒருபோது மின்று. இதற்கு இவர் காரணங் கூறாததே போந்த சான்றாகும்.

## பூர்வபக்ஷம்.

"வாசுதேவமனனம்' முதலிய மற்ற மாயாவாத நூல்களும் இத்தன்மை யவேயாம்."

## சித்தாந்தம்.

பஞ்சதசப் பிரகரணம் சுருதி யுக்தி யனுபவத்திற்கு விரோத மில்லாத ஞான சாஸ்திர மென்பது மேலெழுதியவற்றா லெவ்வாறு பெறப்பட்டதோ, அவ்வாறே வாசுதேவ மனனம் முதலியனவும் ஞான சாஸ்திர மென்பதற்கு அணுத் துணையு மாசங்கை யின்றென்க. வாசுதேவ மனன முதலிய நூல்கள் மாயாவாத நூல்களல்ல. மாயையைப் பொய் யெனக் கூறி அதைத் தும்சஞ் செய்யும் மாயா ரகித நூல்களே யாம். பின்னை யெது மாயாவாத நூலென்னின் உலகிற்கு மாயையை முதற் காரணமாகக் கொள்வதும், அதைச் சத்தென்று கொள்வதும், மாயையின் சம்பந்தத் தால் நேரிட்ட துவிதத்தைச் சத்தியமெனக் கொள்வதும், முத்தியில் மாயா பேதத் தால் நேர்ந்த இரண்டு பொருளை அங்கீகரிப்பதுமான சிவ ஞான சித்தி முதலிய வேதபாஹிய நூல்களேயாம். இதன் விரிவு 'துவித சைவரே மாயாவாதிகள்' என்ற நூலின்கண் காண்க.

## பூர்வபக்ஷம்.

"நம் வைதிக சைவ மேன்மக்கள் கரும்பிருக்க இரும்பு கடித் திளைப்பார் போன்று (எத்தனையோ மெய்ஞ்ஞான நூல்கள் அச்சிலேறியும் மலிந்து கிடக்கின்ற இக்காலத்திலும்) பஞ்சதசப் பிரகரண மென்கிற இவ்வபத்த பஞ்சாங்கத்தைப் படித்துக் காலத்தை வீண் போக்கிக் கலங்குவ தென்னையோ?"

## சித்தாந்தம்.

இவர் கொண்ட மெய்ஞ்ஞான நூல்க ளென்பன வேதம், ஸ்மிருதி, புராணாதி சதுர்த்தச வித்தைகட்கு மாறுபட்டவை யென, இதற்கு முன் வெளி வந்த "சங்கராசாரியர் அவதார மகிமை" முதல் "அவைதிக சைவ சண்ட மாருதம் அல்லது துவித சைவர் விடைகளின் மறுப்பு" வரையி லுள்ள வேத பாஹிய மாயாவாத துவித கண்டன நூல்களால் வெளிப்பட்டு விட்டமையின், அவ்வாறு கண்டிக்கப் பட்ட அஞ்ஞான நூல்களை மெய்ஞ் ஞான நூல்க ளென்று கூறுவது வெற்றுரையினும் வெற்றுரையா மென்றொறுத்திடுக. ஷை பூர்வ பக்ஷ வாக்கியத்தின் றொடக்கத்தில் வைதிக சைவ மேன்மக்க ளென வொன்று கூறுகின்றன ரன்றா? இதுவும் ஒறுக்கத் தக்கதே யாம். வேதத்தைப் பசு நூல், மயக்க நூல், உலக நூல், முத்தி பயக்கா நூல், விபசரிக்கும் நூல் எனக் கூறியதோடு; அவ்வேதப் பொருளையும், அவ்வேதப் பொரு ளான அத்வைதத்தையும், அவ் வேதத்தின வழி நின்ற வைதிகர்களையும் சதா இகழும் சைவர்: வைதிக சைவர் ஆவ தெங்கனம்? அதிலும் அவர்கள் மேன் மக்க ளாவது எங்ஙனமோ? வேதத்தை யிகழும் வேத விரோத சைவர்களை வைதிக சைவ

ரென்னல் அமங்கள வாரத்தை மங்கள வாரமென்னல் போலும், காராட்டை வெள்ளாடு என்னல் போலுமா மென்க. வேத விரோதிகட்கு இரும்பு கரும்பாகவும், கரும்பு இரும்பாகவும் தோன்றுவது சகஜம். அது அவர்களுடைய பூர்வ புண்ணிய மில்லாக் குறையேயாம். "தவமுந் தவமுடையார்க்காகும்" என்ற பிரமாணப்படி பூர்வம் செய்த அபுண்ணியமே இவர்களை வேத அசம்பந்திகளாகச் செய்து விட்டது. 'எத்தனையோ மெய்ஞ்ஞான நூல்கள் அச்சி லேறியும் மலிந்து கிடக்கின்ற இக்காலத்தில்' என்பதற்குப் பதில் வருமாறு : எத்தனையோ சத்திய வேத நூற்கள் இக்காலத்தில் அச்சி லேறித் தெருத் தெருவாய் மலிந்து கிடப்பதை யிவர் அறிந்திலர் போலும்! அச்சிலேறித் தெருத் தெருவாய் மலிந்து கிடக்கும் பைபில்கள் சத்திய வேத மாங்கால் சுருதியாதிகட்கு மாறான (அச்சிலேறி மலிந்து கிடக்கும்) இவர் சொல்லும் அஞ்ஞான நூல்கள் மெய்ஞ் ஞான நூல்க ளாகலாம். இவரது அஞ்ஞான நூல்களி லுள்ள வேத பாஹிய விஷயங்க ளெல்லாம் கண்டிக்கப்பட்டுப் போய்விட்ட மையாலும், அதற் கிவரேனும் மற்றவ ரேனும் பதில் பேசாது மறைந் தொளிகின்ற மையாலும் இனி அவற்றைப் பொய்ஞ்ஞான நூல்க ளென்றே சொல்வது நடுவு நிலைமையும் யோக்கியமுமா மென்க. வேதாதி நூல்கட்கும் யுக்தி அனுபவங்கட்கும் மாறுபடாத (வேத பாஷிய கர்த்தரும், சுத்த வைதிக சிரோன்மணியுமான வித்தியாரண்ணிய சுவாமிகளா லியற்றப்பட்ட) பஞ்சதசப் பிரகரணமே அபத்த பஞ்சாங்கமாகுமானால், சகல வேத ஸ்மிருதி புராணாதி சதுர்த்தச வித்தைகட்கும் பகையாயுள்ள இவரது பொய்ஞ் ஞான பொய்ந் நூல்களின் கதி என்னாம் என்னாம் என்பதைப் புத்திமான்களே யோசிக்கக் கடவர்கள்! இவர் பஞ்சதசப் பிரகரணத்தைப் படிப்பது காலத்தை வீண் போக்கிக் கலங்குவது என்பதால், உலகு பொய் யென்று வெறுத்து, வைராக்கிய உபரதி ஞான சீலராய் அத்துவித முத்தியைப் பெறும் பாக்கியத்தைப் பெறாத கர்ம்மியிலும் மகா பெருங் கர்ம்மியா யிருப்பா ரென்பதில் சற்றும் ஐயமே யில்லை. இத்தகைய பெருங் கர்ம்மியை யொரு பொருட்படுத்திப் பேசுவ தடாதாயினும் மந்தப் பிரஞ்ஞையுடைய முமூட்சுக்கள் பூர்வ பக்ஷியா ருடைய வார்த்தையில் மயங்கா வண்ணம் அதை மறுத்துப் பேசுவது கடமையாயிற் றென்க.

## பூர்வபக்ஷம்.

"வாசுதேவ மனன முதலிய மாயாவாத நூல்களும் இத்தன்மையவே"

## சித்தாந்தம்.

இதிலும் இவரது பாவ கர்மத்தையே காண்பிக்கின்றார். இவரது வேதபாஹிய சைவமே மாயாவாதமென்றும், அதைச் சொல்லும் நூல்களே மாயாவாத நூல்க ளென்றும், அத்வைதம் மாயா ரகித வாத மென்றும், அதைச் சொல்லும் நூல்கள் மாயாரகித நூல்க ளென்றும் சுருதியாதிப் பிரமாணங்களோடும் யுக்தி அனுபவங்க ளோடும் "துவித சைவரே மாயா வாதிகள்" முதலிய நூல்களில் விரிவாய்க் காட்டப்பட்டிருக்கின்றன. அதற்கேதும் பதி லிறுக்காது மாயாவாத நூல்களைப் பிரமாணமாகக் கொண்டொழுகும் இவர் மாயையைத் தும்சஞ் செய்யும் மாயா ரகித

வாத நூல்களான வாசுதேவ மனன முதலிய நூல்களை மாய வாத நூல்களென நவில்வது நன்றேயோ!

## பூர்வபக்ஷம்.

"ஹே! சைவச் செல்வர்காள்! நீவிர் அச் சுவடிகளைக் கரத்தினுந் தீண்டாதீர்! அம்மதத்தவர் பரிபாகத் தாழ்ச்சியால் அந்நூல்களைப் பயின்று காலம் போக்க வேண்டியது அவர் தலை யெழுத் தாதலின் அன்னோரைத் தடுக்ககில்லேம். நம்மவராகிய உங்களுக்கே இத்துணையும் எடுத்துக் காட்டி எச்சரிக்கப் போந்தேம்."

## சித்தாந்தம்.

இவர் வார்த்தை வைதிக சைவர்களுக்குச் செவியில் நாராசம் காய்ச்சி விட்டதுபோ லிருக்கும். பின்னை யெவர் செவிக் கினிமையா யிருக்கு மென்னின்; வேதத்தைப் பசுநூல், மயக்க நூல், உலக நூல், விபசார நூல் என இகழும் வேத தூஷகரும், வேதாந்தப் பெரியோர் துஷகரும், கிறிஸ்தவர் முதலானோரைப் போன்று வைதிக சித்தாந்தங்களை ஆக்ஷேபிப்பவருமான அவைதிகரும், வைதிக சைவசெனப் பொருந்தாப் பேர் வைத்துக்கொண் டிருப்பவருமான வேதப் புறச் சமயிகளுக்கே இனிப்பா யிருக்கு மென்க. அவர்கள் தான் அப்புத்தகங்களைக் கரத்தினுந் தொடமாட்டார்கள்; கண்ணினாலும் ஏறெடுத்தும் பார்க்கமாட்டார்கள். இது அவர்கள் தலையெழுத்தே. இதற்குக் காரணம் ஜந்மாந்தரத்தில் அவாகள் நற்றவம் புரியாமையே யாம்.

## பிரமகீதை ஐதரேய வுபநிடதார்த்தத்தை யுரைக்கும் அத்தியாயம்.

*தத்தமாலானபெத்தவாதியர்தாந்தங்களிற்றாங்கடர்க்கங்கள்*
*கத்திடாநிற்கும்பரிசெலாஞ்சுருதிமிருதிகள்கருதியதழிக்கும்*
*சுத்தமாவிருத்தமாகுமென்றேயென்றுணிவுதொல்பிறவியிற்சுழல்வார்*
*சித்தமானதுபோயிவற்றிலேகாதல்செய்யுமுன்செய்ததீவினையால்.* (6)

*காதலாற்றத்தங்கடவுளருளால்காலபாகத்தினால்அறத்தால்*
*போதராதலினால்வேதவாதத்தைப்பொருந்துவர்புகன்றஅவ்வடைவே*
*வேதவாதத்தைமேவுநல்வினையால்விருப்பினாலன்றிமேவினருஞ்*
*சாதலானதும்பிறத்தலுமில்லாத்தற்பதந்தன்னையேசார்வார்.* (7)

*வான்கருதியமறைவழியைவிட்டுமேற்*
*றான்கருதுதல்சதுரன்றுதன்கையில்*
*தேன்கமழ்திரளையைச்சிந்திச்சந்தியாக்*
*கூன்கையில்விழுந்துளிகொண்டதன்மையே.* (8)

*பொருள்கொண்டமறைநின்றுபுகல்கின்றதுணரா*
*மருள்கொண்டசமயங்கண்மதிகொண்கெதியா*
*யருள்கொண்டபரவின்பமடைகின்றஅவர்போல்*
*இருள்கொண்டுபொருள்கண்டஅவரன்றியவரார்.* (9)

*வேதஞ்சொனபடியொழியவேறுஞ்சிலகலைகளினை*
*யோதுந்திறமருவிமறையோதுஞ்சிவனிருகமலப்*
*பாதந்தொழநினைவிலர்கள்பாசண்டிகளெனவறிக*
*தீதொன்றியவர்களோடு சேருங்கலர்களுமவர்கள்.* (10)

*மையறுவேதமார்க்கமறந்துபாசண்டமார்க்கக்*
*கையரான்மயக்கப்பட்டுக்கலியுகந்தன்னிலுள்ளோர்*
*மெய்யுணர்வனந்தானந்தமேனியாஞ்சிவனைப்பூசை*
*செய்யவாதரியார்செய்வார்தம்மையுஞ்செய்யவொட்டார்.* (17)

*தருமமதறிவில்பாசண்டர்தங்களை*
*மருவலால்வேதமாவாக்கியப்பொருள்*
*கருதிடாரதுகரமணியிற்காட்டிடுங்*
*குருவையும்வழிபடார்குதர்க்கமேவலார்.* (19)

## ஷை கேனோபநிடதார்த்த முரைக்கும் அத்தியாயம்.

*பரமாத்துவிதஞானியே பரதேவதைதானவனேயித்*
*திரமாமுத்தியானிங்குச்செப்பும் பொருள் செய்வினையாலும்*
*உரமாந்ததீசிகௌதமனாலுண்டாஞ்சாபவுரையாலுங்*
*கரமாமனுடர் நெஞ்சதனிற் காதல் செய்யாதொருகாலும்.* (36)

## ஷை பிரகதாரணிய உபநிடதத்தில் மைத்திரேயப் பிராமணார்த்தம்.

*வேதநூல்மிருதிபுராணம் அத்துவிதமெய்ம்மையே விளம்பமெய்த்தர்க்கம்*
*சாதியாநிற்கத்தத் துவஞானத்தவருமிப்பொருளையே சார*
*ஆதியாஞ்சிவனாராயணனானிங்கறைந்த துமபேதமாயிருக்க*
*வாதியாமொருவர்க்கிதையனாதரித்தல்மாயையினுடையவல்லபமே.* (14)

## கூர்மபுராணம் திருக்கலியாணம்.

*அருமாமறைகண்முழுவதுமென்சத்தியாகுமாங்கவைகள்*
*திருமாலுந்தித்தடம்பூத்தசெல்வன்முன்னைப்படைப்பதனில்*
*ஒருநான்மறையாம்பெயரோடுநடக்குமன்னூல்வழியொழுகார்*
*மருவார்முத்திவீடதனின்மம்மருறுநூல்வலைப்பட்டே* (36)

*வேதவொழுக்கமிகழ்ந்துபுல்லர்விரகின்றம்போற்றனிபுனையுந்*
*தீதுநூலின்வழிசென்றோர்செல்வர்நரகர்க்கதிதிகளாய்*
*ஆதறன்னாற்புன்சமயங்கற்றோர்முகத்தினருமறைகள்*
*ஓதியுணர்ந்தமுதுக்குறைவினுரவோர்சிறிதுநோக்காரால்.* (40)

*சாறுவாங்கம்காபாலஞ்சாற்றும்பாஞ்சராத்திர நூல்*
*மாறுசெய்யும்வாமமுளமயக்கச்செய்தநூலாகும்*
*தேறியிந்நூற்படிநின்றோரிவற்றையுலகிற்செப்புவோர்*
*பாறுதுடருநரகத்தினளப்பில்காலம்படிந்திடுவார்.* (41)

*வேதநூல்களவற்றின்வழிவிராட்டாஞ்சுவாயம்புமனுமன்*
*ஓதுநூல்கள்வியாதமுனியுரைத்தநூல்களவற்றின்*
*தீதிலருமாமறைக்கிழவர்செப்புநூல்களனைத்துமே*
*நீதிநூல்களிவற்றின்வழிநின்றோர்நெறியினின்றோரே.* (42)

## விஷ்ணுபுராணம் 6 - ம் அம்சம் கலிதருமம்.

"இப்படியாக வருணாசிரம தருமங்கள் கெட்டு வேதமார்க்கமே யொளித்துப் போகப் பாஷாண்ட மதங்களைக் கைக் கொண்டு ஜனங்கள் நடப்பதினால் அதருமம் விருத்தியாவது பற்றி ஆயுள் குறைந்துவிடும்......... எப்போது பாஷாண்டர் விருத்தி யாகிறார்களோ, எப்போது வேதமார்க்கத்தை யனுசரித்த சற்புருஷருக்குத் தீங்கு நேரிடுகின்றதோ, எப்போது தருமவான்களுடைய எத்தனங் கெட்டுப்போகின்றதோ, அப்போது கலிமுதிர்ந்து நிற்கிறதென்றறிந்து கொள்ள வேண்டும்........... எப்போது வேதஞ்சொல்லுங் காரியங்களிலே பிரீதியில்லாமல் பாஷாண்ட வாக்கியங்களிற் பிரீதி யுண்டாகின்றதோ, அப்போது கலி மகா பலம்பொருந்தி யிருக்கிறானென்றறிய வேண்டும்.

இந்தச் சற்பிரமாணங்களினால் வேத விரோதிகள் வேத மார்க்கத்தை விட்டு மயக்க முள்ள புன் சமயங்களை அனுசரித்து வேத மகாவாக்கியப் பொருளைக் கருதாமல் குதர்க்கம் பேசுவார்க ளென்றும், ஷை புன்சமயிக ளான மயங்கிய பெத்த வாதியர்கள் வீண் தர்க்கம் பேசிச் சுருதி ஸ்மிருதிகளின் பொருளை அழித்துச் சநநமரணத்திற் கழலுவார்களென்றும், வேதம் ஸ்மிருதி புராணங்கள் அத்வைத உண்மையினையே சொல்லுகின்றனவென்றும், தர்க்கமும் அதையே சாதிக்கின்ற தென்றும், தத்துவஞானிகளும் அவ்வத்துவிதப் பொருளையே அடைகிறார்க ளென்றும்; சிவன் சொல்லிய ஈசுவரகீதையும், நாராயணர் சொல்லிய பகவத் கீதையும், பிரமன் சொல்லிய பிரம கீதையும் ஒரே விதமாய் அத்வைதத்தையே சொல்லுகின்றன வென்றும், இங்ஙனமாயும் அத்வைதத்தை அநாதரித்தல் மாயா வல்லப மென்றும், ததீசி கௌதம ருடைய சாப வயப்பட்டவர்கள் அத்வைதத்தை விரும்ப மாட்டார்க ளென்றும்; இவர்கள் பாஷாண்டிகளென்றும், எப்போது வேத விரோதமான பாஷாண்டவாக்கியங்களிற் பிரீதியுண்டாகிறதோ, அப்போது கலியினது பலம் அதிகமாயிருக்கிறதென் றறிய வேண்டுமென்றும் ஏற்படுவதால்

அதைப் பொய் படுத்தாமல் அதற் கிலக்கியமாக இவ்வரதத்தர் நடந்து சாட்சி காட்டுகின்றார். உலகில் எப்போதும் புண்ணியவான்களும் இருப்பார்கள்; பாவிகளும் இருப்பார்கள். அவர்களில் புண்ணியவான்கள் வேத சாஸ்திரங்களின் வழி நின்று சற்கிருத்தியங்கள் செய்தால், பாவிகள் வேத சாஸ்திரத்தை யெதிர்த்துத் தூஷித்து அவைகளுக்கு விரோதமான துர்க்கிருத்யஞ் செய்கின்றார்கள். அவ்வாறே இக்காலத் தில் சிலர் வேத சாஸ்திரங்களை யிகழ்ந்தும் அவைகளுக்குக் கட்டுப் படாமல் நடந் தும், அவைகட்கு விரோதமான சில தப்புமார்க்கங்களை யேற்படுத்திக்கொண்டும், அத்தப்பு மார்க்களின் வழி நின்றவர்களைப் புகழ்ந்தும், அது தப்புமார்க்க மென்றறிந்து அதன்வழி நில்லாதவர்களை இகழ்த்தும் அநர்த்தம் செய்துகொண்டு வருகின்றார்கள். அவர்களில் இவ்வரதத்தரும் ஒருவராகவிருக்கின்றனர். இவர் வேதசாஸ்திர விரோத மாகப் பல விஷயங்களைப் பன்முறை யெழுதி அப்போ தப்போது மறுக்கப் பட்டிருக் கிறார். அதுபோல் இப்போதும் வேத சாஸ்திர சம்மதமா யிராநின்ற 'பஞ்சதசப் பிரகரண' த்தை அநியாயமாய்த் தூஷித்தார். அது பொறுக்காமையால் அந்தத் தூஷ ணையைப் பரிகாரஞ்செய்து இவ்விஷயத்தை இன்று முடித்தோம். இவ்வாறு இவர் காலத்தை வீணாகத் தீய வழியிலேயே செலுத்துவது மிக விசனிக்கத்தக்கதாம்! "கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத்தக" என்ற நாயனார் நீதி வாக்கிய த்தை இவர் பொருட்படுத்தவில்லை. அதனால் கல்வியின் பயனைப் பெறாது பயனின்மையினையே பெற்று இந்த ஜன்மத்தை வீணாக்கிவிட்டார். வீணாக்கி விட்டதோடு போகாது வருகிற ஜன்மத்துக்கு வேண்டிய பாவமூட்டையையு மிப்போது சம்பாதித்துக் கொண்டார். இனியேனும் வீண் துவேஷத்தை விட்டுச் சுருதி ஸ்மிருதி புராணாதிகளின் வழிநின்று, அவைகட்குவிரோதமான தப்பு வழியை வீட்டு விலகிச் சற்கருமங்கள் புரிந்து நற்கதி யடைந்து க்ஷேமப்படுவாராக. இதை யொரு முறையன்று, பன்முனறயுஞ் சொன்னதாக மனதில் கொள்ளக்கடவர்!

**தீயவைதீய பயத்தலால் தீயவை**
**தீயினும் அஞ்சப்படும்.** (குறள்.)

**முற்றிற்று.**